# சமூகக்கல்வியும் வரலாறும்

## ஆண்டு - 8

சமூகக்கல்வி மன்றம்
வன்னி.
2000

# முன்னுரை

சிறீலங்கா அரசின் பாடத்திட்டத்தின் கீழ் பள்ளிகளில் இதுவரை கற்பிக்கப்பட்டு வரும் வரலாற்றுப்பாடநூல்கள் உண்மையான வரலாறாக அமையாமல் சிங்கள இனத்தை மேன்மைப்படுத்தக்கூடிய வகையிலே மிகைப்படுத்தியும், தமிழ்மக்கள் பெருமைகளை மறைத்தும், தமிழ்மக்களை இழிவு படுத்தும்வகையிலே திரித்தும் எழுதப்பட்டுள்ளன.

இந்தநாடு சிங்கள பௌத்தர்களுக்கு மட்டும் உரியநாடென்றும் அவர்களது வரலாறே ஈழத்து வரலாறென்றும் சிங்களவரால் சிங்களவர்களுக்காகச் சிங்கள மொழியில் எழுதப்பட்ட ஆக்கங்களின் தமிழ்மொழி பெயர்ப்பே தமிழ் மாணவர்களுக்கு ஈழத்து வரலாறெனக் கற்பிக்கப்பட்டுவருகிறது.

சிறப்பும் மேன்மையும் மிக்க வரலாற்றைக்கொண்ட இனம் அந்த வரலாற்றாற் பெருமையடைகிறது. அத்தகைய வரலாறு அந்த இனத்தின் வளர்ச்சிக்கு வழிகாட்டுகிறது. பெருமை மிக்க பண்டை வரலாற்றைக்கொண்ட ஈழத்தமிழினத்தின் இன்றைய மாணவர்கள் தமது வரலாற்றைக் கற்பதும் தெரிந்துகொள்வதும் அதனூடாக அவர்கள் வளர்ச்சியைப் பெறுவதும் சிங்கள ஆட்சியாளரால் திட்டமிட்டு மறுக்கப்படுகிறது. அதுமட்டுமன்றி, ''உனது இனம் இந்த மண்ணை ஆக்கிரமிக்க வந்த இனம், இந்த மண்ணில் அக்கிரமம் புரிந்த இனம், கள்ளத்தோணியில் வந்த இனம், அடிமை இனம்'' எனத் தமிழினத்தை இழிவுபடுத்துகின்றன. பொய்யான வரலாறு தமிழ்மாணவர்கழுக்குப் புகட்டப்படுகிறது.

இத்தகைய கல்வியினால் தமிழ்மாணவர்கள் தன்னம்பிக்கையோ நாட்டுப்பற்றோ அற்றவர்களாக வாழும் நிலை இருந்துவருகிறது. இனத்துக்கு வழிகாட்டும் வரலாற்றுக் கல்விக்கு இந்த நிலை என்றால் சமூகவாழ்க்கையை நெறிப்படுத்தும் நோக்கோடு சிறீலங்கா அரசால் கற்பிக்கப்படும் சமூகக்கல்வியினூடாகத் தமிழ்மாணவர்கள் தமது நாட்டின் நீர்வளநிலவளங்களையோ சமூக அறிவையோ வாழ்க்கையை நெறிப்படுத்தக்கூடிய அறிவையோ பெறமுடியவில்லை. தமிழினம் சிங்களவர்க்கு அடங்கி அடிமையாக வாழவைப்பதற்கேற்ற வகையிலேயே சமூகக்கல்விபாடதிட்டம் பாடப்பரப்புகள் திட்டமிடப்பட்டு ஆக்கப்பட்டு உள்ளன.

எனவேதான் இன்றைய வரலாறு சமூகக்கல்வி பாடங்களில் தமிழ் மாணவர்களுக்கு நாட்டமோ ஆர்வமோ ஏற்படவில்லை. தேர்வுகளில் புள்ளி பெறுவதற்கென்ற ஒரே நோக்கிலேயே இப்பாடங்களைத் தமிழ்மாணவர்கள் படிக்கின்றனர்.

தமிழ்மாணவர்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டக்கூடியதாகவும் சமூகவாழ்வை நெறிப்படுத்தக்கூடியதாகவும், பொதுத் தேர்வுகளுக்கு ஊறுநேராத வகையிலும் 6, 7 ,8 ஆம் ஆண்டு மாணவர்களுக்கு, ''சமூகக்கல்வியும் வரலாறும்'' என்ற பாடநூலினூடாகச் சில பாட அலகுகளைச் சமூகக்கல்வி மன்றம் ஆக்கித்தந்திருக்கிறது.

இந் நூலை மாணவர்கள் துடிப்போடும், ஆர்வத்தோடும் கற்று அறிவையும் பயனையும் பெறவேண்டும் என்பதே எமது எதிர்பார்ப்பும் வேணவாவுமாகும்.

— சமூகக் கல்வி மன்றம் —

இயல் 1

# ஈழத் தமிழர் தாயகம்

வட இந்தியாவிலிருந்து விஜயனும் அவன் தோழர்களும் இலங்கைக்கு வந்து குடியேறியதாகக் கூறப்படும் காலத்துக்கு (2500 ஆண்டுகளுக்கு) முன்னர் தமிழீழத்தின் தனி மரபினரான நாகர்களும் இயக்கர்களும் வாழ்ந்து வந்தனர் என்பதை மகாவம்சமே எடுத்துக்கூறுகிறது.

இலங்கையின் பல்வேறு பகுதிகளிலும் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வுகளின்போது, 3000 ஆண்டுகளுக்கு முன்னர் தமிழகத்தில், செல்வாக்குப் பெற்றிருந்த பெருங்கற் பண்பாட்டையொத்ததாக, இங்கும் பரவலாகப் பல தொல்பொருட்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இவை இலங்கையிலும் 3000 ஆண்டுகளுக்கு முன்னர் (கி. மு. 1000 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்) தமிழினம் சிறந்த நாகரிகத்தோடு வாழ்ந்தமையை எடுத்துக்காட்டுகின்றன.

2000 ஆண்டுகளுக்கு முன்னர் மதுரையில் நிலவிய தமிழ்ச்சங்கத்தில் ஈழத்தமிழ்ப் புலவர்கள் பலர் வீற்றிருக்கக்கூடிய அளவுக்கு இலங்கையிலே தமிழர்கள் நிலையாகவும் செழிப்பாகவும் வாழ்ந்துவந்திருக்கின்றனர்.

மகாவம்சத்தின் கூற்றுப்படி ''விஜயன் 700 பேருடன் இலங்கைக்கு வந்த ஓராண்டுக்குள் தமிழ் இளவரசி மற்றும் 700 பெண்கள், கைவினைக் கலைஞர்கள், பதினெண் குடிகளைச் சேர்ந்த 1000 குடும்பங்கள் எனப் பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் வந்து குடியேறினர்''

1 ஆம் கஜபாகு காலத்தில் (கி. பி. 113 - 135) 12000 தமிழர்கள், இங்கு கொண்டு வந்து குடியேற்றப்பட்டதாகப் பூஜாவளி என்னும் சிங்கள நூல் கூறுகின்றது.

இலங்கை முழுவதிலும் தமிழ் மக்கள் 3000 ஆண்டுகளுக்கு மேலாக வாழ்ந்து வருகின்றனர். 2300 ஆண்டுகளுக்கு மேலாக, தமிழரும் சிங்களவரும் மாறி மாறி இலங்கையில் அனுராதபுரத்திலும் அதற்குத் தெற்கேயும் ஆட்சி நடத்தியிருக்கின்றனர். வட இலங்கையிலே தமிழர்கள் தனியாட்சி நடத்தி நிலையாக வாழ்ந்து வருகின்றனர்.

இலங்கையின் வரலாற்றில் ஓரிரு சிங்கள அரசர்களே குறிப்பிட்ட சில ஆண்டுகள் இலங்கையின் வடபகுதியையும் சேர்த்து ஆட்சி செய்தனர்.

கி. பி. 1215 ஆம் ஆண்டு மாகன் ஆட்சிபீடமேறியதன் பின் இலங்கையின் வட கிழக்கு, வடமேற்குப் பகுதி தமிழ்ப் பகுதியாகவும் தென்மேற்பகுதியும் மலையகப் பகுதியும் சிங்களப் பகுதியாகவும் மாறிவிட்டன.

13 ஆம் நூற்றாண்டிலிருந்து 16 ஆம் நூற்றாண்டின் இறுதிவரை இலங்கையின் வலிமைமிக்க அரசாக யாழ்ப்பாணத் தமிழரசு திகழ்ந்தது. இன்றைய வடகிழக்கு மாகாணங்களையும் சிலாபம் புத்தள கரையோரப் பகுதிகளையும் உள்ளடக்கிய பகுதி தமிழர் தாயகமாக இருந்துவந்தது.

7 ஆம் நூற்றாண்டில் யாழ்ப்பாண அரசு போர்த்துக்கேயரிடம் வீழ்ச்சியடைந்தது. போர்த்துக்கேயரும் அவர்களின் பின் ஆட்சி நடத்திய ஒல்லாந்தரும் இலங்கையின் கரையோரப் பகுதி முழுவதையும் கைப்பற்றி ஆட்சி நடத்தியபோதிலும், ஆங்கிலேயர் இலங்கையின் கரையோரங்களோடு மலையகத்தையும் கைப்பற்றியதன் பின்தான் இலங்கை முழுவதையும் ஒரே ஆட்சியின்கீழ் கொண்டு வந்தனர். அவர்கள் தமது ஆட்சியின் கீழ் இலங்கையை வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு, மத்தி என 1833 இல் ஐந்து மாகாணங்களாக ஆக்கினர்; வடகிழக்கு மாகாணங்களுக்குட் பல சிங்களப் பகுதிகளும் உள்ள

# ஒல்லாந்தர்கால இலங்கை - 1790




**ஒல்லாந்தர் இலங்கைத் தீவின் கரையோரப் பகுதிகள் முழுவதையும் கைப்பற்றிய போதிலும் வடகிழக்குத் தமிழ்ப்பகுதியைத் தனியாகவும் சிங்களப் பகுதிகளைத் தனி யாகவுமே ஆட்சி செய்தனர் என்பதைக் காட்டும் படம்.**




*1833 இல் தமிழ் சிங்களப் பகுதிகளை ஒன்றிணைத்த ஆங்கிலேயர் இலங்கைத் தீவை 5 மாகாணங்களாகப் பிரித்தனர். தமிழர் பகுதியான வடக்கு கிழக்கு மாகாணங்களில் பல சிங்களப் பகுதிகளும் உள்ளடங்கின.*

டங்கின. வெவ்வேறு பண்பாடுகளைக் கொண்ட இயல்பான தொடர்புகள் எதுவும் இல்லாத தமிழ் மக்களையும் சிங்கள மக்களையும் ஒன்றாக ஆள்வதில் பல்வேறு இடையூறுகளை எதிர்கொண்ட ஆங்கிலேய ஆளுநர் சேர் வில்லியம் கிரெகறி 1873 இல், வடகிழக்கு மாகாணங்களுடன் சேர்க்கப்பட்டிருந்த சிங்களப் பகுதிகளான நுவரகலாவிய (அனுராதபுரம்) தம்மங்கடுவ (பொலநறுவை) ப் பகுதிகளை மீண்டும் தனியாகப்பிரித்து வடமத்திய மாகாணம் எனப் புதிய மாகாணம் ஒன்றை உருவாக்கினார்.

நீண்ட காலமாகத் தனித்தன்மை பேணிவந்த வெவ்வேறு இன மக்களைக் கட்டாயமாக ஒன்றிணைத்து ஆட்சி நடத்த முடியாது என்பதைப் பட்டறிந்து உணர்ந்த ஆங்கிலேயர், வரலாற்றுக் காலத்திலிருந்து தனித்தன்மையோடு வாழ்ந்து வந்த வடகிழக்குத் தமிழ் மக்களை 40 ஆண்டுகளின் பின் மீண்டும் சிங்கள இணைப்பிலிருந்து பிரித்துத் தனித்தன்மையுடன் வாழவிட்டனர்.

இதிலிருந்து இலங்கையின் வடகிழக்கு மாகாணம், தமிழ் மக்களின் பாரம்பரியப் பகுதி என்றும் வடமத்திய மாகாணம் சிங்கள மக்களின் பகுதி என்றும் 1873 இலேயே உறுதிசெய்யப்பட்டுப் பிரிக்கப்பட்டது எனலாம். புதிய எல்லை பிரிக்கப்பட்டதன் பின் வடகிழக்கு மாகாணங்களில் 2% இற்குக் குறைவான சிங்கள மக்களே இருந்தனர் என்பது நினைவிற் கொள்ளத்தக்கதாகும்.

இலங்கைத்தீவிலே நீண்ட தொடர்ச்சியான வரலாற்றுப் பின்னணியைக் கொண்ட தமிழர் தாயகப் பகுதி ஏறத்தாழ 20000 சதுர கிலோமீற்றர் பரப்பளவைக் கொண்டதாகும். இது இலங்கையின் வடகிழக்கு மாகாணங்களுடன் புத்தளம் சிலாபக் கரையோரப் பகுதியையும் உள்ளடக்கிய பகுதியாகும். இது இலங்கையின் மொத்த நிலப்பரப்பில் 32% ஆகும்.

## சிங்களக் குடியேற்றங்களினால் நிலப்பறிப்பு:

2500 ஆண்டுகளுக்கு மேலாக, தமிழ் மக்களின் பாரம்பரிய வாழ்விடமாக இருந்து வந்த தமிழீழ மண்ணில் (20,000 ச. கி. மீ), 1/3 பகுதிக்கும் கூடுதலான (8000 ச. கி. மீ) நிலம் கடந்த 50 ஆண்டுகளில் சிங்கள அரசுகளின் திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களினாற் பறிபோயுள்ளது; சிங்களவர்களின் வாழ்விடமாக்கப்பட்டுள்ளது.

## திருகோணமலை:

திருகோணமலை தமிழர் தாயகமாம் தமிழீழத்தின் மையப்பகுதி; வடக்கு கிழக்கு மாகாணங்களை இணைத்து நிற்கும் பெருநகர்; உலகின் மிகச் சிறந்த இயற்கைத் துறைமுகத்தைக் கொண்டிருக்கும் சிறப்பு மிகுநகரம். வரலாற்றுக் காலத்திலிருந்து தமிழர்களின் வாழ்விடமாக இருந்துவரும் இந்த மண்ணிற்றான் சிங்கள இனவெறியர் முதலிலே தம்பார்வையைத் திருப்பினர்.

2628 ச. கி. மீ. பரப்பளவைக் கொண்ட திருகோணமலை மாவட்டத்தில் 1827 இல் இறைநெறி (மத) அடிப்படையில் எடுக்கப்பட்ட முதற் குடிசனமதிப்பீட்டின்போது 250 (1. 53%)சிங்கள மக்கள் மட்டுமே வாழ்ந்துள்ளனர்.

1936 இல் டொனமூர் அரசியலமைப்பின் கீழ் தனிச்சிங்கள அமைச்சரவையில் தலைமையமைச்சராக இருந்த டி. எஸ். சேனாநாயக்காவின் திட்டத்தின்படி இந்த மண்ணில் மறைமுகமான சிங்களக் குடியேற்றங்கள் முதலிலே தொடங்கப்பட்டன. இவை இலங்கையின் சுதந்திரத்துக்கு முன்னரே திருமலை மாவட்டத்தின் மக்கட்டொகையின் இனக் கூறுபாட்டை (விகிதத்தை) மாற்றியமைத்துவிட்டன.

1921 இல் எடுக்கப்பட்ட குடிசனமதிப்பீட்டின்போது திருகோணமலையில் 4. 38% ஆக இருந்த சிங்கள மக்களின் குடித்தொகை அதற்கு அடுத்தபடியாக 1946 இல், 20. 68% ஆகக்கூடியது.

டி. எஸ். சேனாநாயக்கா சுதந்திர இலங்கையின் தலைமையமச்சரானதும், பல்வேறு திட்டங்களின் அடிப்படையிற் சிங்களக்குடியேற்றங்கள் விரைவாக மேற்கொள்ளப்பட்டன.




*பழைய வடக்கு கிழக்கு மாகாணங்களிலிருந்து நுவரகலாவிய, தம்மன்கடுவ, விந்தனை, பகுதிகளைப் பிரித்து வேறாக்கி, எஞ்சிய பகுதி தமிழ்பேசும் மக்கள் பகுதி என்பதை ஆங்கிலேய ஆளுனர் சேர். வில்லியம் கிரெகறி உறுதி செய்ததைக் காட்டும் படம்.*

# தமிழீழப் பகுதிகள்




1 - யாழ்ப்பாண மாவட்டம்
உ - கிளிநொச்சி "
3 - முல்லைத்தீவு "
4 - வவுனியா "
5 - திருகோணமலை "
6 - மட்டக்களப்பு "
7 - அம்பாறை "
8 - மன்னார் "
9 - புத்தள மாவட்டக் கரையோரம்

கந்தளாய் வேளான்குடியேற்றத்திட்டத்திற் குடியமர்த்தப்பட்ட 2000 குடும்பங்களின் 77% வெளிமாவட்டங்களைச் சேர்ந்த சிங்களக் குடும்பங்களாகும். இக்குடியேற்றத் திட்டத்துக்கெனப் பொத்தானைப் பகுதியிற் பயிர்ச்செய்கை மேற்கொண்டிருந்த இஸ்லாமியத் தமிழர்களை விரட்டியடித்துவிட்டு அவர்களின் 1600 ஏக்கர் நிலம் பறித்தெடுக்கப்பட்டது.

இதனையடுத்து, வெருகல் ஆற்றை மறித்துக் கட்டி மேற்கொள்ளப்பட்ட அல்லை நீர்ப்பாசனத் (பாசனத்) திட்டத்திற் குடியேற்றப்பட்ட 3000 குடும்பங்களில் 65% வெளிமாவட்டச் சிங்களக்குடும்பங்களாகும்.

முதலிக்குளத்தில் (மொறவேவ வில்) குடியேற்றப்பட்ட 700 குடும்பங்களில் 50% சிங்களக்குடும்பங்களாகும்.

பதவியாக் குடியேற்றத்தில் 50% தமிழருக்கு வழங்கப்படும் என அறிவித்தபோதிலும். அங்கு முழுக்க முழுக்கச் சிங்களக் குடும்பங்களே குடியேற்றப்பட்டன. இவைமட்டுமன்றித் துறைமுக வளர்ச்சி, வானூர்தி நிலைய விரிவாக்கம், சுற்றுலாமையம் எனப் பல்வேறு திட்டங்களின் பேரிலே சிங்களக்குடியேற்றங்கள் மேற்கொள்ளப்பட்டன. 1960 ஆம் ஆண்டுகளில் திருகோணமலையிற் பல ஊர்களின் பெயர்கள் சிங்களப் பெயர்களாக மாற்றப்பட்டன. அவற்றிற் சில கீழே தரப்படுகின்றன.

| தமிழ்ப்பெயர் | | மாற்றப்பட்ட சிங்களப்பெயர் |
|---|---|---|
| முதலிக்குளம் | — | மொறவேவ |
| புடைவைக் கட்டு | — | சாகரபுர |
| பெரியவிளாங்குளம் | — | மகாதிவுல்வெவ |
| குமரேசன் கடவை | — | கொமரங்கடவெவ |
| வான் ஆறு | — | வான்எல |
| அரிப்புச் சந்தி | — | அலிஒலுவ |
| கல்லாறு | — | சோமபுர |
| பனிக்கட்டி முறிப்பு | — | பணிக்கட்டியாவ |
| ஆண்டான்குளம் | — | ஆனந்தவெவ |
| ஆண்டான்குளம் (ஊர்) | — | ஆனந்தகம |
| ஆண்டான் குளத்தின் ஒருபகுதி | — | பற்றிஸ்புர |
| கஞ்சிமடம் | — | அபயபுர |
| உப்புவெளியின் ஒருபகுதி | — | சிறீமாபுர |
| இன்னொருபகுதி | — | விஜிதபுர |
| மடத்தடி ஒருபகுதி | — | சுமேதபுர |
| 4ஆம் கட்டை | — | சிங்கபுர |
| சீனக்குடாவின் ஒருபகுதி | — | தாலந்தாபுர |
| ,, இன்னொருபகுதி | — | தானியகம |

இவற்றைவிட ஏராளமான புதிய குடியேற்றங்களுக்கும் சிங்களப் பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன.

1970 களின் பிற்பகுதியில், பெரிய விளாங்குளப்பகுதி மகாதிவுல்வெவ எனப் பெயர் மாற்றப்பட்டு, அப்பகுதியில் இருந்த இஸ்லாமியத் தமிழர்களின் நிலங்கள் பறிக்கப்பட்டுச் சிங்களவர்களுக்கு வழங்கப்பட்டன.

இவ்வாறு 1827இல் திருகோணமலையில் 1.53% ஆகவிருந்த சிங்களவர் குடித்தொகை 1981 இல் 33.62% ஆக உயர்ந்துவிட்டது.

1977 இல் திருகோணமலை மாவட்டத்தின் 60% நிலப்பரப்பைக் கொண்ட சேருவெல என்ற புதிய சிங்களத் தேர்தற்றொகுதியும் உருவாக்கப்பட்டது.

## திருகோணமலை மாவட்டத்தின் இன வாரியான குடித்தொகை

| வருடம் | மொ. கு தொகை | தமிழர் | % | முஸ்லிம் | % | தமிழ் பேசும் மக்கள் | % | சிங்களவர் | % |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1827 | 19158 | 15663 | 81.52 | 3245 | 16.93 | 18908 | 98.45 | 250 | 1.53 |
| 1881 | 22197 | 14394 | 64.84 | 5746 | 25.88 | 20140 | 90.72 | 936 | 4.21 |
| 1891 | 25745 | 17117 | 66.48 | 6426 | 24.96 | 23543 | 91.44 | 1109 | 4.30 |
| 1901 | 28441 | 17069 | 60.01 | 8258 | 29.03 | 25327 | 89.04 | 1203 | 4.22 |
| 1911 | 29775 | 17233 | 57.90 | 9714 | 32.64 | 26947 | 90.54 | 1138 | 3.82 |
| 1921 | 34112 | 18586 | 54.48 | 12846 | 37.65 | 31432 | 92.13 | 1501 | 4.38 |
| 1946 | 75926 | 33795 | 44.51 | 23219 | 30.58 | 57014 | 75.09 | 15716 | 20.68 |
| 1953 | 83917 | 37517 | 44.70 | 28616 | 34.10 | 66133 | 78.80 | 15296 | 18.22 |
| 1963 | 138220 | 54050 | 39.10 | 42560 | 30.79 | 96610 | 69.89 | 39950 | 21.90 |
| 1971 | 188245 | 71749 | 38.15 | 59924 | 32.05 | 131673 | 70.20 | 54744 | 28.80 |
| 1981 | 256790 | 93510 | 36.41 | 74403 | 28.97 | 167913 | 65.38 | 86341 | 33.62 |

மாறிமாறி ஆட்சிக்கு வந்த சிங்களக் கட்சிகள் தமக்குட் பல்வேறு நிலைகளில் முரண்பட்டுக் கொண்டாலும் கிழக்கு மாகாணத்திலிருந்து தமிழ் மக்களை விரட்டியடிப்பதிலும், அங்கு சிங்களக் குடியேற்றங்களை ஏற்படுத்துவதிலும் நிலையான, தொடர்ச்சியான கொள்கைகளையும் திட்டங்களையும் ஒருமனதாகக் கடைப்பிடித்து வருகின்றன; தங்குதடையின்றிச் சிங்களக்குடியேற்றங்களை அமைப்பதற்காகவே திருமலையில் இதுவரை ஒரு தமிழர்கூட மாவட்ட ஆட்சித் தலைவராக (அரசஅதிபராக) அமர்த்தப்படவில்லை.

1983 இல், சிங்கள இனவெறித் தாக்குதலுக்கு முன்னர், திருகோணமலையில் யான்ஓயா குடியேற்றத்திட்டம் தொடங்கப்பட்டு ஆயிரக்கணக்கான சிங்கள மக்கள் குடியேற்றப்பட்ட போதிலும் தமிழீழ விடுதலைப் போர் கடுமையாக நடைபெற்றநிலையில் விடுதலைப் புலிகளுக்கு அஞ்சி, குடியேறிய சிங்களவர்களிற் பெரும்பாலானோர் அப்பகுதியை விட்டுத் தப்பி ஓடிவிட்டனர்.

1987 ஜூலை வரை விடுதலைப்புலிகள் - சிங்களப்படையினர் போர் தொடர்ந்து நடை பெற்றதால் விடுதலைப்புலிகளுக்கு அஞ்சி வாழ்ந்த சிங்களமக்கள், இலங்கை - இந்திய உடன் படிக்கையையடுத்து இந்தியப்படையின் வருகையைத் தொடர்ந்து, சிங்கள அரசின் தூண்டு தலினால் திருமலை மாவட்டத் தமிழ்ப்பகுதிகளில் மீண்டும் குடியேற்றங்களை மேற் கொண்டனர். அவற்றிற் சில.

அல்லை - கந்தளாய் தெரு கரும்புத்தோட்டத்திலிருந்து 92ஆம் கட்டைவரையுள்ள பகுதியில் 6000 பேரைக் கொண்ட 500 குடும்பங்கள் குடியேறின.

அல்லை - கந்தளாய் தெரு சூரியபுர பகுதியில் 1800 பேர்களைக் கொண்ட 300 குடும்பங்கள் குடியேறின.

திருமலை - கண்டி சாலையில் கந்தளாயிற்கும் அளுத்ஓயாவுக்குமிடையிலுள்ள தமிழர்களினது காணிகளிலும் அரசகாணிகளிலும் ஏராளமான சிங்களவர்கள் குடியேறினர்;

திருமலை - அனுராதபுரம் சாலையில் 10 ஆம் மைல் கல்லுக்கு அருகிலும் திருமலை ஆண்டான்குளம் பகுதியிலும் பல சிங்களக் குடியேற்றங்கள் மேற்கொள்ளப்பட்டன;

மூன்றாவது ஈழப்போரையடுத்து இடம்பெயர்ந்த மக்களை மீளக்குடியமர்த்துதல் என்ற போர்வையில் திருகோணமலை மாவட்டத்தை இராணுவமயமாக்கி, சிங்கள மக்களைக் குடியேற்றும் நடவடிக்கையில் சிறீலங்கா அரசு விரைந்து செயற்படத் தொடங்கியது.

1990ஜூன் மாதத்தின் பின் சிறீமாபுர, பாலையூற்று, அன்புவழிபுரம், லிங்கநகர், பகுதிகளில் ஏராளமான சிங்கள மக்கள் குடியேற்றப்பட்டனர்;

ஏற்கெனவே திருமலை நகரையண்டிய நெல்சன்புர, விஜிதபுர, ஹாரதாஸ்வத்த, பன்சலவத்த போன்ற பகுதிகளிலே திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களை ஏற்படுத்திய சிறீலங்கா அரசு, திருமலை நகருக்குள் இராணுவத்தின் தொகையைப் பெருக்கி நகரத்தையும் சிங்களப் பகுதியாக்கும் முயற்சியிலீடுபட்டுவருகிறது.

## மட்டக்களப்பு

மீன்பாடும் தேனாடாம் மட்டு நகர் ''தமிழீழத்தின் நெற்களஞ்சியம்'' என்றும், ''நீர் வளமும் நிலவளமும் நிறைந்து நிற்கும் பொன்விளையும் பூமி'' என்றும் போற்றப்படுகிறது.

2500 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மக்கள் வாழ்ந்துவரும் மட்டக்களப்புப் பகுதியில் (இன்றைய அம்பாறை மாவட்டமும் இணைந்த) ஐரோப்பியராற் கைப்பற்றப்பட்ட காலத்திலும் ஒரு சிங்களவர்தானும் இருந்ததில்லை. 1827 இல் இறைநெறி (மத) அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட குடிசன மதிப்பீட்டின்போதும் ஒரு சிங்களவர்தானும் இருந்ததில்லை. அன்றைய மட்டக்களப்பு மாவட்டத்தில் இருந்த 216 கல்விக்கூடங்களில் ஒரு சிங்களக் கல்விக்கூடங்கூட இருக்கவில்லை. 1931 ஆம் ஆண்டு காலப்பகுதியில் அரசாங்க சபைக்கான தேர்தற்றொகுதிகளான திருகோணமலை - மட்டக்களப்பு, மட்டக்களப்பு தெற்கு ஆகிய தொகுதிகளிலிருந்து ஒரு சிங்களவராயினும் தேர்தலில் நிற்கவில்லை. மிகச் சிறுபான்மையினராகச் சிங்களவர் இருந்தமையினால் ஒரு சிங்களவர்தானும் தேர்தல்களிற் போட்டியிடவில்லை. (இக்காலப்பகுதியில் 2 பொதுத்தேர்தல்கள், 4 இடைத் தேர்தல்கள் இத்தொகுதிகளில் நடைபெற்றன.)

ஆயினும் 50 ஆண்டுகளுக்கு முன்னர் ஆங்கிலேயரிடமிருந்து ஆட்சியுரிமையைப் பெற்ற சிங்கள ஆட்சியாளர், அன்றைய மட்டக்களப்பின் தென்பகுதியிலிருந்த பட்டிப்பளை ஆற்று நீரை மறித்து அணைகட்டிச் சேனநாயக்க சமுத்திரம் என்னும் நீர்த்தேக்கத்தை அமைத்தனர். அப்பகுதியில் கல்லோயா எனும் 'வேளாண்குடியேற்றத் திட்டம் அமைக்கப்பட்டது. 44 பிரிவுகளைக் கொண்ட அக்குடியேற்றத்திட்டத்தில் 38 குடியேற்றங்கள் 10 ஆயிரத்துக்கு மேற்பட்ட வெளிமாவட்டச் சிங்களக் குடும்பங்களுக்கு வழங்கப்பட்டன; நீர்வள மற்ற மீதி 6 குடியேற்றத்திட்டங்கள்தான் தமிழருக்கும் இஸ்லாமியத் தமிழருக்கும் வழங்கப்

## மட்டக்களப்பு மாவட்டத்தின் இன வாரியான குடித்தொகை
### அம்பாறை உள்ளிட்டது

| ஆண்டு | மொ. கு தொகை | தமிழர் | % | முஸ்லிம் | % | தமிழ் பேசும் மக்கள் | % | சிங்களவர் | % |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1827 | 27,383 | 19,095 | 69.47 | 8,288 | 30.15 | 27.383 | 99.62 | ----- | -- |
| 1881 | 105,358 | 61,014 | 57.91 | 37,255 | 35.36 | 98,269 | 93.27 | 5,012 | 4.75 |
| 1891 | 122,699 | 69,584 | 56.71 | 44,780 | 36.49 | 114,364 | 93.20 | 6,403 | 5.21 |
| 1901 | 145,161 | 79,857 | 55.01 | 54.190 | 37.33 | 134,047 | 92.34 | 7,775 | 5.21 |
| 1911 | 153,943 | 83,948 | 54.53 | 60,695 | 39.42 | 144,643 | 92.95 | 5,771 | 3.74 |
| 1921 | 158,709 | 84,665 | 53.34 | 63,146 | 39.78 | 147,810 | 93.12 | 7.243 | 4,56 |
| 1946 | 203,186 | 102,264 | 50.33 | 85,805 | 42.22 | 188,069 | 92.55 | 11,850 | 5.83 |
| 1953 | 270.493 | 130,381 | 48.20 | 106,700 | 39.44 | 237,030 | 87.64 | 31,174 | 11.52 |
| 1963 | 407,910 | 192,070 | 47.1 | 143,190 | 35.1 | 335,200 | 82.2 | 68,740 | 16.9 |
| 1971 | 529,321 | 243,817 | 46.1 | 188,643 | 35.6 | 432,460 | 81.7 | 93,828 | 17.7 |
| 1981 | 719,685 | 315,941 | 43 9 | 240,798 | 33.5 | 556,739 | 77.4 | 157,017 | 21.8 |

பட்டன, பாரம்பரியமாகத் தமிழ் பேசும் மக்கள் வாழ்ந்துவந்த அந்தப் பகுதியிற் பல ஆயிரம் ஏக்கர் நிலம் பிடுங்கப்பட்டுச் சிங்களவர்களுக்கு வழங்கப்பட்டது. தீகவாபியில் விகாரை கட்டுவதற்காக இஸ்லாமியத் தமிழர்களின் 1000 ஏக்கருக்கும் மேற்பட்ட நிலம் சிங்கள ஆட்சியாளராற் பிடுங்கப்பட்டது. இதுபோன்றே ''புதைபொருளாராய்ச்சி,'' ''புனிதநகர்'' ''நகரவிரிவாக்கம்,'' எனப் பல்வேறு விளக்கங்களைக் கூறிப் பல ஆயிரக்கணக்கான தமிழர் நிலங்கள் பறிக்கப்பட்டன.

## கிழக்கு மாகாணச் சிங்களக் குடித்தொகை




*கிழக்கு மாகாணத்தில் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் மந்தமாகவும், சிங்களவர் ஆட்சிக்காலத்தில் விரைவாகவும் சிங்களவர் குடித்தொகை ஏற்றம்பெற்றதை இவ் வரைபடம் தெளிவாகக் காட்டுகிறது.*

இவ்வாறு 1959 ஆம் ஆண்டுக்கிடையில் மட்டக்களப்பு மாவட்டத்தின் தெற்குப் பகுதியிற் பெரும்பாலான சிங்களவர்களைக் குடியேற்றி அம்பாறை எனும் புதிய மாவட்டம் உருவாக்கப்பட்டது.

அம்பாறை மாவட்டத்தின் புதிய சிங்களத் தேர்தற்றொகுதிக்குப் பெருமளவு நிலப் பகுதி ஒதுக்கப்பட்டது. சிங்களவர்கள் நிறைந்த பகுதியில் மாவட்டத் தலைநகர் அமைக்கப்பட்டு மாவட்ட ஆட்சித் தலைவர் (அரச அதிபர்) அலுவலகமும் அங்கு ஏற்படுத்தப் பட்டது.

இவ்வாறு 1827 இல் ஒரு சிங்களவர்தானும் இருக்காத மட்டக்களப்பு தெற்கில் (அம்பாறையில்) 1981 இல் 1, 47, 000 இற்கும் மேற்பட்ட சிங்களவர்கள் பெருகி விட்டனர்.

## வவுனியா மாவட்டம்

வன்னிமண் வீரஞ்செறிந்த மண். இந்தமண் ஆங்கிலேயரின் ஆட்சியின் தொடக்க காலம் வரை தமிழ்க் குறுநில மன்னர்களால் ஆளப்பட்டுவந்த தமிழ்ப் பகுதியாகும். கலாவேவ பகுதியிலிருந்து அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிங்களவர்கள் வந்து குடியேறிய பகுதிகளை உள்ளடக்கிய வவுனியா தெற்கு உதவி ஆட்சித்தலைவர் (அரசாங்க அதிபர்) பிரிவு 1903 ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்டது.

நெடுங்கேணி உதவி ஆட்சித்தலைவர் (அரச அதிபர்) பிரிவிலிருந்த மகாகம்பலிய பகுதியில் வவுனியா மாவட்ட ஆட்சித் தலைவருக்கோ உதவி ஆட்சித்தலைவருக்கோ தெரியாமற் சிங்கள மக்களைக் குடியேற்ற அனுராதபுரம் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலக (கச்சேரி) த்திலிருந்து ஒப்போலை (அனுமதிப்பத்திரம்) வழங்கப்பட்டது.

1979இல் மதவாச்சியைச் சேர்ந்த 3 உதவி ஆட்சித்தலைவர் (உதவி அரச அதிபர்) பிரிவுகளையும், வவுனியாவிலிருந்து சில உதவி ஆட்சித் தலைவர் பகுதிகளையும் ஒன்றிணைத்துப் புதிய சிங்கள மாவட்டம் ஒன்றை உருவாக்க ஜெயவர்த்தனா அரசு மேற்கொண்ட முயற்சி தமிழ் மக்களின் கடும் எதிர்ப்பினாற் கைவிடப்பட்டது.

நெடுங்கேணி உதவி ஆட்சித்தலைவர் பகுதியின் கீழ் இருந்த படிக்கலக்குளம், கச்சல் குளம், கொக்கச்சங்குளம் ஆகிய பகுதிகள் வவுனியா தெற்குச் சிங்களப் பகுதிகளுடன் இணைக்கப்பட்டன.

நெடுங்கேணி உதவி ஆட்சித் தலைவர் பிரிவிலிருந்த வெடிவைத்தகல்லு, காட்டுப் பூவரசங்குளம், கோவிற்புளியங்குளம், துவரமோட்டை, தனிக்கல்லு, பட்டிக்குடியிருப்பு ஆகிய ஆறு ஊர்களிலிருந்து 1986 இல் சிங்களப்படையினரின் நடவடிக்கைகளினால் அஞ்சியோடி மருதோடையில் ஏதிலிகளாகத் தங்கியிருந்த தமிழ் மக்களை மீண்டும் தமது ஊர்களில் குடியேறவிடாது! சிங்களப்படையினர் தடைசெய்தனர்.

வவுனியா மாவட்ட சபையின் பெரும் பணச்செலவிலே திருத்தியமைக்கப்பட்ட கொக்கச்சங்குளம், செட்டிகுளத்தைச் சேர்ந்த வேப்பங்குளம் ஆகிய பகுதிகளிலிருந்து தமிழ் மக்கள் சிங்கள இராணுவத்தினரால் வலுக்கட்டாயமாக வெளியேற்றப்பட்டு, அப்பகுதிகள் சிங்களவர்களுக்கு வழங்கப்பட்டன. அப்பகுதிகளின் பெயர்களும் போகஸ்வெவ, கோம்பகஸ்வெவ என்னும் சிங்களப் பெயர்களாக மாற்றப்பட்டன.

1953 - 58 ஆம் ஆண்டு காலப்பகுதிகளில் இம்மாவட்டத்தைச் சேர்ந்த பாவற்குளப் பகுதியில் 6, 534 ஏக்கர் நிலத்தில் குடியேற்றமொன்றை ஏற்படுத்திய அன்றைய சிங்கள அரசு தேசிய நல்லிணக்கத்தை ஏற்படுத்துகின்ற முயற்சி என்று கூறிக்கொண்டு அக்குடியேற்றத்தில் 35% அனுராதபுர மாவட்டச் சிங்கள மக்களைக் குடியேற்றியது. அதனால் அதுவரை காலம் தமிழ் மக்களை மட்டுமே கொண்டிருந்த பாவற்குளம் 371 சிங்களக் குடும்பங்களையுள்ளடக்கிய பகுதியாக மாறிவிட்டது.

தமிழகத்திற் கண்டெடுக்கப்பட்ட தடயங்களை ஒத்ததாக இருப்பதால் இலங்கையில் விஜயன் வருகை புரிந்ததாகக் கூறப்படும் காலத்துக்கு முன்னரே தமிழர்கள் வாழ்ந்தார்கள் என்ற கருத்து நிறுவப்படுகிறது.

விஜயன் வருகைக்கு முன்னரே இலங்கையில் நாகதீபம், கல்யாணி, ஆகிய பகுதிகளில் நாகர்களின் அரசுகள் சிறப்புற இருந்ததாகவும் அவ்வரசர்களுக்கிடையே ஏற்பட்ட பிணக்கை, புத்தபெருமான் நேரில் வந்து தீர்த்துவைத்ததாகவும் மகாவம்சமே குறிப்பிடுகிறது: அதுமட்டுமன்றி, கல்யாணி (களனி) அரசனாக இருந்த நாக அரசன் மணியக்கியனின் அழைப்பின் பேரில் புத்தர் மூன்றாந் தடவை இலங்கைக்கு வந்தார் என்றும் மகாவம்சம் கூறுகிறது.

சிறந்த இலக்கண இலக்கியங்களைக் கொண்ட தமிழ்மொழிக்கு உரித்தானவனான எல்லாளன், சிங்களம் எழுத்து மொழியாக வளர்ச்சி பெற முன்னரே இலங்கைத்தீவிற் சிறப்புற ஆட்சி நடத்தினான். பாளியில் மகாவம்சம் எழுதப்படுவதற்கு முன்னரே சிங்களமொழி முறையான எழுத்துமொழியாவதற்கு முன்னரே, பௌத்தநெறி குறித்த மணிமேகலை போன்ற நூல்கள் தமிழ்மொழியில் வெளிவந்திருக்கின்றன. இந்நிலையிற் சிங்களவர்களின் முன்னோடியான விஜயன்தான் இலங்கைக்கு நாகரிகத்தைக் கொண்டு வந்தான் என்பது கேலிக்குரியது. மகாவம்சத்தின் கூற்றுப்படியும் சிங்களவர்களுக்கு இலங்கைத்தீவில் இருக்கும் உரிமைகள் அனைத்தும் தமிழ் மக்களுக்கும் இருக்கின்றன.

700 பேருடன் விஜயன் இலங்கைக்கு வந்திறங்கிய சில நாட்களில் (ஓராண்டுக்குள் பாண்டிய நாட்டிலிருந்து இளவரசியும் 700 இளம்பெண்களும் கைவினைக்கலைஞர்களும் பதினெண் குடிகளைச் சேர்ந்த 1000 குடும்பங்களுமென (விஜயனோடு வந்தவர்களை விடப் பலமடங்கு கூடுதலான தமிழர்கள்) வந்து குடியேறியிருக்கிறார்கள் என்று மகாவம்சம் கூறுகிறது.

இவ்வாறே காலத்துக்குக்காலம் வடஇந்தியாவிலிருந்து இலங்கைக்கு வந்திருப்பதாக மகாவம்சம் கூறும் மக்கள் எண்ணிக்கையை விட, தமிழகத்திலிருந்து வந்த தமிழ்மக்கள் தொகை மகாவம்சக் கூற்றுப்படியே பலமடங்கு கூடுதலாகும்.

## மகாவம்சத்தின் இருட்டடிப்பு

மகாவம்சம் தேரவாத பௌத்தத்தின் மேன்மையையும் தேரவாத பௌத்த அரசர்களின் செயற்பாடுகளையுமே எடுத்துக்கூறுகின்றது. இலங்கையை ஆண்ட தமிழ் அரசர்களின் செயற்பாடுகளைப் பற்றி, தேரவாத பௌத்தரல்லாத சிங்கள அரசர்களின் செயற்பாடுகள் பற்றி இயன்றவரை இருட்டடிப்புச் செய்துள்ளது; அல்லது திட்டித்தீர்த்துள்ளது.

மகாவம்சம் எடுத்துக்கூறிய சில தமிழ் அரசர்களின் பெயர்கள் தேரவாத பௌத்த அரசர்களின் பெயர்களைப் பெருமைப்படுத்தவும் தமிழர்களை வன்கவர்வாளர்களாகக் (ஆக்கிரமிப்பாளர்களாகக்) காட்டவும், பௌத்தர்கள் (சிங்களவர்கள்) இந்துக்களை (தமிழர்களை) வெற்றிகொண்டதாகக் காட்டவுமே பயன்பட்டுள்ளமை தெளிவாகின்றது.

மகாயான பௌத்தநெறியைப் பின்பற்றிய 1 ஆம் கஜபாகு பற்றி இருட்டடிப்புச் செய்த மகாவம்சம், இன்னொருபுறம் மகாயான பௌத்த சிங்கள அரசர்களைத் திட்டித் தீர்த்திருக்கிறது.

அநுராதபுரம் தவிர ஏனைய பகுதிகளில், குறிப்பாக வடபகுதியில் நிலவிய தமிழர் அரசுகள் பற்றி முற்றாக இருட்டடிப்புச் செய்த மகாவம்சம் துட்டகைமுனுவைப் பெருமைப்படுத்துவதற்காக ஒரு இடத்தில் மட்டும் அநுராதபுரத்துக்குத் தெற்கே 32 தமிழ் அரசுகள் இருந்தமை பற்றிக் கூறியிருக்கிறது.

வரலாற்றுக்காலத்திலிருந்து ஆங்கிலேயர் ஆட்சியின் தொடக்ககாலம் வரை தமிழர் பெருமையோடு ஆட்சிநடத்திவந்த மண், ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திலும் தமிழ்மண் எனத்தமிழர்கள் வாழ்ந்துவந்த மண்; இன்று சிங்கள மண்ணாக மாறிக் கொண்டிருக்கிறது;

## மணலாறு (வெலி ஓயா)

1965 ஆம் ஆண்டில் வவுனியா நெடுங்கேணிப் பகுதியில் அரசிடமிருந்து காணிகளைப் பெற்ற தமிழ் வணிகர்கள் பெரும் பணச் செலவில் சீர்படுத்திப் பெரும் பண்ணைகளை உருவாக்கினர். இவ்வாறு உருவான 15 இற்கும் மேற்பட்ட பண்ணைகளில், ,,கென்ற் பாம்,'' ''டொலர்பாம்,'' ''சிலோன் தியேட்டர்'' ''ஆனந்தா ரேடிங் கம்பனி'' ''அம்பலவாணர் பண்ணை'', இராசரத்தினம் பண்ணை என்பன குறிப்பிடத்தக்கவை;

1977, 1981 ஆம் ஆண்டுகளில், சிங்கள இனவெறித் தாக்குதல்களால் இடம்பெயர்ந்து வந்த மலையகத் தமிழர்கள் பெரும் எண்ணிக்கையில் வன்னிப்பகுதியிற் குடியேறினர். இவ்வாறு குடியேறியவர்களில் 177 ஏக்கர் கொண்ட கென்ற் பாமில் 98 குடும்பங்களும் 243 ஏக்கர் கொண்ட டொலர் பாமில் 120 குடும்பங்களும் உள்ளூர் தொண்டு நிறுவனங்களின் உதவியுடன் குடியேற்றப்பட்டதுடன் கிணறு வெட்டவும் தென்னங்கன்றுகள் நடவும் பாற்பண்ணைகள் அமைக்கவும் உதவிகள் வழங்கப்பட்டன.

இதனைப் பொறுத்துக் கொள்ளமுடியாத சிங்கள அரசு, ஊர்விரிவாக்கத்திட்டம் என்று கூறி 65 ஆம் ஆண்டில் தமிழ் வணிகர்களுக்கு வழங்கிய பண்ணைகள் அனைத்தையும் மீண்டும் கையகப்படுத்தியதுடன் கென்ற் பாம், டொலர்பாமிற் குடியேறியிருந்த மலையகத் தமிழர்களை அச்சுறுத்தி வலுக்கட்டாயமாக விரட்டியடித்துவிட்டு, 1984 செப்ரெம்பரில் சிறைக்கைதிகளாக இருந்த சிங்களவர்களை அவர்களது குடும்பத்தினருடன் அப்பகுதிகளிற் குடியேற்றினர். இவ்வாறு குடியேற்றப்பட்டவர்களுள், 1983 இல் வெலிக்கடைச் சிறையில் 53 தமிழர்களைப் படுகொலை செய்த கொலைக் குற்றவாளிகளும் அடங்குவர். அன்றைய ஜே. ஆரின் அரசு அவர்களுக்குத் தற்காப்புக்கெனப் படைக்கலன்களையும் (ஆயுதங்களையும்) வழங்கியது. அக்கும்பல் அயலூர்களில் உள்ள தமிழர் வீடுகளில் விரும்பியபடி புகுந்து கொள்ளையடித்தும் பெண்களைத் துன்புறுத்தியும் வந்ததால் விடுதலைப்புலிகள் 1984 நவம்பரில் தாக்குதலை மேற்கொண்டு அவர்களை விரட்டியடித்தனர்.

1984 ஏப்ரலில் மணலாற்றுப் பகுதியையொட்டிய முல்லைத்தீவு மாவட்டத்தின் 47 ஊர்களைச் சேர்ந்த பல ஆயிரக்கணக்கான மக்களைச் சிங்கள இராணுவத்தை விட்டு விரட்டியடித்துவிட்டு, அப்பகுதிகளைத் தடைசெய்யப்பட்ட பகுதியாக அறிவித்தது சிங்கள அரசு. விடுதலைப்புலிகள் சிங்கள இராணுவத்தினர் மீது நடத்திய பெரும் தாக்குதல்களினாற் பெருமளவு சிங்களக் குடியேற்றத்தை அப்பகுதிகளில் ஏற்படுத்த முடியாத சிங்கள அரசு, விடுதலைப்புலிகளுக்கும் இந்திய அரசுக்குமிடையே கடும் போர் நடைபெற்ற காலத்தைப் பயன்படுத்தி, 1988 ஏப்ரல் 15 இல் முல்லைத்தீவு, திருகோணமலை மாவட்டங்களுக்கிடையே இருந்த மணலாற்றுப் பகுதியையும் வவுனியா அனுராதபுர மாவட்டங்களின் சில பகுதிகளையும் இணைத்து வெலிஓயா எனப் பெயர் மாற்றம் செய்து தனி மாவட்டமாக அறிவித்தது;

வெலிஓயா தனிமாவட்டச் செயற்பாடுகள் தமிழ் மக்களின் கடும் எதிர்ப்புகளினால் பின்னர் நிறுத்தப்பட்டுவிட்டாலும், சிங்கள அரசு அப்பகுதிகளிற் குடியேறிய சிங்கள மக்களின் (பாது) காப்புக்கென இராணுவ முகாம்களை அமைத்து, மறைமுகமாகச் சிங்களக் குடியேற்ற நடவடிக்கைகளை மேற்கொண்டவண்ணம் இருக்கிறது.

ஏறத்தாழ 150 சதுரமைல் கொண்ட வெலிஓயாப் பகுதியில் 75,000 ஏக்கர் தமிழர் நிலம் பறிபோயுள்ளது. முல்லைத்தீவு மாவட்டத்திலிருந்து மட்டும் 16,000 ஏக்கருக்கும் கூடுதலான தமிழர் நிலம் சிறிலங்கா அரசினாற் பிடுங்கப்பட்டுள்ளது.

## மன்னார் மாவட்டம்

2500 ஆண்டுக்கு முன்பிருந்தே தமிழகத்துக்கு இலங்கையின் நுழைவாயிலாகவும் தமிழரின் ஆட்சிப்பகுதியாகவும் இருந்த துறைமுகநகரை உள்ளடக்கிய பகுதியே மன்னார் மாவட்டமாகும். 1881 இல் வெறும் 142 சிங்கள மக்களை மட்டுமே கொண்டிருந்த இம்மாவட்டத்தில் சிங்களவர்களின் அத்துமீறிய குடியேற்றங்களினாலும் சிங்கள ஆட்சியாளரின் திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களினாலும் 1981 இல் 8710 சிங்களவர்களைக் கொண்ட மாவட்டமாக ஆகிவிட்டது.

மரமுந்திரிகைச் செய்கைக்கென மரமுந்திரிகைக் ''கூட்டுத்தாபனத்தினால்'' சிலாவத்துறை, மறிச்சுக்கட்டி, பண்டிவிரிச்சான் பகுதியிற் கையகப்படுத்தப்பட்ட நிலத்தில் 1700 ஏக்கர் நிலம் 299 தமிழர்களுக்கு வழங்கப்பட்டது. அவர்கள் பெரும் பணச்செலவு செய்து நிலத்தைச் சீர்செய்து கிணறுகளையும் வெட்டியதன் பின் ''கூட்டுத்தாபனத்துக்கு' இழப்பு (நட்டம்) என்று கூறி அந்த மக்களின் உரிமங்களை நீக்கிக் காணிகளைத் திரும்பப் பிடுங்கிய சிங்கள அரசு அவற்றை ஓய்வுபெற்ற சிங்கள இராணுவத்தினருக்கு வழங்கியது.

இதுபோன்றே மீன்பிடி, கைத்தொழில், சிறுவேளாண்குடியிருப்புக்கள் போன்றவற்றினூடாகவும் பல சிங்களக் குடியேற்றங்கள் மேற்கொள்ளப்பட்டன.

ஆயினும் விடுதலைப்புலிகளுக்கும் சிறீலங்கா இராணுவத்துக்கும் இடையில் ஏற்பட்ட பெரும் போரையடுத்து சிலாவத்துறை, மடு போன்ற பகுதிகளில் இருந்த சிங்களவர்கள் அப்பகுதிகளைவிட்டு ஓடிவிட்டனர்.

## புத்தளம் மாவட்டம்

1953 ஆம் ஆண்டுவரை தமிழ்பேசும் மக்களைப் பெரும்பான்மையினராகக் கொண்டிருந்த புத்தளம் மாவட்டம் அத்துமீறிய சிங்களக்குடியேற்றங்களினாலும் பிறமாவட்டப் பகுதிகளை இணைத்ததனாலும் 85% சிங்களவர்களைக் கொண்ட மாவட்டமாக மாற்றப் பட்டுவிட்டது.

இலங்கைத்தீவில் ஆங்கிலேயரின் ஆட்சி ஒருங்கிணைப்பின்போது 1833 இல் அன்றைய புத்தளம் மாவட்டத்துடன் - சிங்களவர் பெரும்பான்மையினராக இருந்த, முன்னரே மாற்றப்பட்ட - சிலாபம் மாவட்டம் இணைக்கப்பட்டிருந்தாலும் 58 ஆண்டுகளுக்குள் (1891 இல்) புத்தளத்துடன் சிலாபத்தை இணைத்தது பொருத்தமற்றது எனப் புத்தளத்திலிருந்து சிலாபம் அன்றைய ஆங்கிலேய ஆளுநரால் பிரித்து வேறாக்கப்பட்டது. அதன் பின் தமிழ்பேசும் மக்களைப் பெரும்பான்மையினராகக் கொண்டிருந்த புத்தளம் மாவட்டத்தில் அத்துமீறிய பல சிங்களக் குடியேற்றங்களைச் சிங்கள அரசு ஊக்குவித்ததோடு, சிங்களவரைப் பெரும்பான்மையினராக முன்னர் மாற்றப்பட்ட சிலாபம் மாவட்டத்தை 1953 இல் மீண்டும் இணைத்து, மல்வத்துஓயா சிங்களக் குடியேற்றத்தையும் மேற்கொண்டு சிங்களவர்களைப் பெரும்பான்மையினராகக் கொண்ட மாவட்டமாக அன்றே மாற்றிவிட்டது.

புத்தளம் மாவட்டத்திலுள்ள கீழ் வரும் தமிழ் ஊர்ப்பெயர்கள் புத்தளம் தமிழ்பேசும் மக்களின் மாவட்டம் என்பதற்குச் சான்றாக அமைகின்றன.

| | |
|---|---|
| கருக்குப்பனை | கொத்தாந்தீவு |
| மாம்புரி | முந்தல் |
| கோட்டைகாட்டி | மங்கலவெளி |
| குசலை | பாலாவி |
| மானாவாரி | மதுரங்குளி |
| ஆனைவிழுந்தான் | பொன்பரப்பிப்பற்று |
| நல்லதரங்கட்டு | தேத்தாப்பளை |
| மதுரஞ்சோலை | கற்பிட்டி |
| முத்துப்பந்தி | பனையடிக்குளம் |

தொங்கக்காடு
உடப்பு
வண்ணாத்திவில்
பிரப்பங்குளம்
புளிச்சாக்குளம்
ஆண்டிமுனை
பூனைப்பிட்டி
ஒற்றப்பனை
கட்டைக்காடு
ஆனையிறக்கம்
சுருவில்

சிலாபம் முன்னேஸ்வரத்தைச் சுற்றியுள்ள தமிழூர்கள்.
வீரபாண்டியப்பிராமணப்புரம்
கழுவாமடு
மருதங்குளம்
காக்காப்பள்ளி
இரட்டைக்குளம்
பூக்குளம்
மணற்குளம்
தாமரைக்குளம்
பொத்துவில்
இரணைவில்
சிலாபம்

இவை தவிர புத்தளம் மாவட்டத்தின் கிழக்குப்பகுதி உதவி அரச அதிபர் பிரிவு தமிழகப்பற்று என அழைக்கப்பட்டதும் குறிப்பிடத்தக்கது. எனவே முன்னர் புத்தளம் மாவட்டக் கரையோரம் மட்டுமன்றி மாவட்டம் முழுவதுமே தமிழர் பகுதியாயிருந்தது என்பது தெள்ளத்தெளிவாகிறது.

## மண்மீட்புப் போர்

2500 ஆண்டுகளுக்கும் மேலாக இன்றைய தமிழீழ மண் தமிழரின் வாழ்விடமாக இருந்துவருகிறது. கடந்த 60 ஆண்டுகளுக்கு முன்புவரை, தமிழீழ மண் யாரால் ஆளப் பட்டு வந்தாலும் தமிழீழ மண்ணாகவே, தமிழர் பகுதியாகவே ஆளப்பட்டுவந்திருக்கிறது.

கடந்த 60 ஆண்டுகளில், தமிழர் மண்ணையும் சேர்த்து ஆளுகின்ற வாய்ப்பைப் பெற்றுவிட்ட சிங்கள ஆட்சியாளர்கள் தமிழ்மண்ணை இல்லாததாக்கும் முயற்சியில் முனைப்பாகச் செயற்பட்டு வருகின்றனர். இருபெரும் சிங்களக் கட்சியினர் இலங்கையை மாறி மாறி ஆண்டுவருகின்றனர். இவர்கள் ஆட்சியில் இவர்களுக்கிடையே பல்வேறு செயற்பாடுகளில், நடைமுறையில் வேறுபாடு ஏற்பட்டு, பல்வேறு திட்டங்களைத் தம் விருப்புக்கேற்றபடி மாற்றியும் வந்திருக்கிறார்கள்.

ஆனால், தமிழ் மண்ணைக் கூறுபோட்டுத் தமிழர்களின் பகுதிகளிற் சிங்களக் குடியேற்றங்களை நிறுவி, இலங்கையின் எந்தப் பகுதியிலும் தமிழர்களைப் பெரும்பான்மையின ராக இருக்கவிடக்கூடாது என்பதில் ஒத்த கொள்கையும் நடைமுறையும் உள்ளவர் களாகவே இவர்கள் இருக்கின்றனர். கடந்த 60 ஆண்டுகளில் கிழக்கு மாகாணத்தில் 1/2 பங்கு நிலத்தைத் தமதாக்கிக்கொண்டதுடன் தமிழர் வாழ்ந்துவந்த தொடர்ச்சி யான பகுதிகளைச் சிங்கள ஆட்சியாளர் பலகூறுகளாக்கிவிட்டனர்.

அதனோடு சிங்கள ஆட்சியாளர்களின் பார்வை வடமாகாணத்தை நோக்கியும் திரும்பிவிட்டது. சிங்களக் குடியேற்றங்கள் தொடங்கப்பட்ட காலங்களிலிருந்தே அன்றைய தமிழ் அரசியற்றலைவர்களினதும் மக்களினதும் எதிர்ப்புக்களையும், அமைதிவழிப் போராட்டங்களையும் புறந்தள்ளி, நசுக்கிய சிங்கள ஆட்சியாளர்கள், மடைதிறந்த வெள்ளம்போல் சிங்களக் குடியேற்றங்களைப் பெருகவிட்டனர்.

விரஞ்செறிந்த வன்னிமண்ணிற் பாவற்குளம், வேப்பங்குளம் மற்றும் நெடுங்கேணிக்குத் தெற்கே இருந்த பகுதிகளும் சிங்களப் பகுதிகளாகிவிட்டன. ஈழத்தமிழரின் பழந்தமிழ்ப் பகுதிகளான புத்தளம் பகுதி தனிச்சிங்களப் பகுதியாகிவிட்டது. தமிழ்ழத்தின் தலைநகர் எனப் போற்றப்படும் திருமலை மையப்பகுதியில் 60% சிங்களப்பகுதியாகிவிட்டது மீன் பாடும் தேனாடாம் மட்டக்களப்பு இருகூறாக்கப்பட்டு அம்பாறை என்னும் பெயரில் 50% சிங்களக் குடியேற்றத்தால் விழுங்கப்பட்டுவிட்டது வடக்குமாகாணத்தையும் கிழக்கு மாகாணத்தையும் கூறுபோட்டுச் சிங்கள மாவட்டமொன்றை அமைக்கும் நோக்கோடு முல்லைத்தீவு வவுனியா மாவட்டங்களின் ஒருபகுதி நிலத்தை உள்ளடக்கிய மணலாற றுப்பகுதி வெலிஓயாவாக மாற்றப்பட்டுக்கொண்டிருக்கிறது.




***தொடர்ச்சியான தமிழ் மண்ணைக் கூறுபோட்டுத் துண்டாடிய சிங்களக் குடியேற்றங்கள்.***

ஆயினும் தமிழ் மண்ணைக் காப்பதற்கும் தமிழ் மக்களைக் காப்பதற்குமென, தமிழீழ விடுதலைப்புலிகள் தமிழீழ விடுதலைப் போராட்டத்தைத் தொடங்கி அது வீறு பெற்று விட்ட நிலையிலே பிற்காலத்திலேற்பட்ட பல சிங்களக் குடியேற்றப்பகுதிகளை விட்டுச் சிங்கள மக்கள் அச்சத்துடன் ஓடிவிட்டனர். ஆயினும், சிங்கள ஆட்சியாளர்கள் தமக்கு வாய்ப்பு ஏற்படும் காலங்களிலெல்லாம் தமிழ் மண்ணைக் கவருவதிலேயே கண்ணாக இருந்துவருகிறார்கள்.

எனவே, தமிழீழ மக்கள் தாம் காலங்காலமாக வாழ்ந்துவரும் நிலத்தைப் பறி போகாது காப்பதற்கும் இழக்கப்பட்ட நிலங்களை மீட்பதற்கும் உள்ள ஒரே வழி மண்ணை மீட்பதற்கான தமிழீழ விடுதலைப்போரை வீறோடு மேற்கொண்டு, விரைந்து தமிழீழத்தை அமைத்துக்கொள்வதுதான்.

பயிற்சி:

01. 3000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழர்கள் இலங்கையில் வாழ்ந்தனர் என்பதை வெளிப்படுத்தும் தொல்லியற் சான்றுகளைத் தருக:-

02. தமிழ் மக்கள் பெருந்திரளாக இலங்கைக்கு வந்தது பற்றி மகாவம்சம் குறிப்பிடும் நிகழ்வுகள் மூன்றைக் குறிப்பிடுக:-

03. ஈழத் தமிழர் தாயகப் பகுதிகள் எவை?

04. 3 அரசுகள் நிலவிய இலங்கைத் தீவை 1833 இல் ஒன்றிணைத்த ஆங்கிலேயர் அதை எத்தனை மாகாணங்களாக வகுத்தனர்? அவை எவை?

05. தமிழர் தாயகமான வடகிழக்கு மாகாணப்பகுதிகளிலிருந்து நுவரகலாவிய, தம்மன் கடுவ பகுதிகள் எந்த ஆண்டில், யாரால் பிரித்து வேறாக்கப்பட்டன?

06. நுவரகலாவிய, தம்மன்கடுவப் பகுதிகள் நீக்கப்பட்டதன்பின் வடகிழக்கு மாகாணங் களில் எத்தனை நூற்றுக்கூறு (%) சிங்களவர்கள் வாழ்ந்தனர்?

07. இலங்கைத்தீவில் எத்தனை நூற்றுக்கூறு பகுதி தமிழீழத் தாயகமாகும்? தமிழீழத் தின் பரப்பளவு எவ்வளவு?

08. தமிழர் தாயகப் பகுதியின் மாவட்டங்களையும் அவற்றின் பரப்பளவுகளையும் தருக:-

09. முதலிற் சிங்களக்குடியேற்றம் மேற்கொள்ளப்பட்ட தமிழ்ப் பகுதி எது? யாரால் மேற்கொள்ளப்பட்டது?

10. தமிழீழத்தின் ஒவ்வொரு மாவட்டத்திலும் 1827 ஆம் ஆண்டிலும் 1981 ஆம் ஆண்டிலும் இருந்த மக்கட்தொகை பற்றிக் குறிப்பிடுக:-

11. கல்லோயாக் குடியேற்றத்திட்டத்தில் எத்தனை பிரிவுகள் அமைக்கப்பட்டன? அவற் றில் எத்தனை சிங்கள மக்களுக்கு வழங்கப்பட்டன?

12. சிங்களமக்களின் நலன்களுக்காகச் சிறீலங்கா அரசால் அம்பாறை என்னும் புதிய மாவட்டம் எந்த ஆண்டில் அமைக்கப்பட்டது?

13. வவுனியா மாவட்டத்தில் சிங்களப் பெயர்களாக மாற்றப்பட்ட தமிழ் ஊர்கள் ஐந்தின் பெயர்களைத் தருக:-

14. மன்னார் மாவட்டத்தில் மரமுந்திரிகைச் செய்கைக்கென ஒதுக்கப்பட்டு, பின்னர் தமிழரிடமிருந்து பிடுங்கப்பட்டு ஓய்வுபெற்ற சிங்கள இராணுவத்தினரிடம் வழங் கப்பட்ட பகுதிகள் எவை?

15. தமிழர் பெரும்பான்மையினராக இருந்த புத்தளம் மாவட்டம் எந்த ஆண்டில் எவ்வாறு சிங்கள மாவட்டமாக மாற்றப்பட்டது?

16. மணலாற்றுப் பகுதியின் மலையகத் தமிழர் குடியிருந்த பண்ணைகள் எவை? அவை யாரால் பிடுங்கப்பட்டு யாருக்கு வழங்கப்பட்டன?

17. மணலாற்றுப் பகுதியில் எவ்வளவு தமிழர் நிலம் சிங்கள அரசாற் பறிக்கப்பட்டது? அவற்றில் முல்லைமாவட்ட நிலம் எவ்வளவு?

18. சிங்களக் குடியேற்றங்களின் விரைவு தடுக்கப்பட்டிருப்பது எதனால்?

19. தமிழ்மண்ணைக் காப்பதற்கான வழி என்ன என்பதைக் கூறுக:-

# இயல் - 2

# மகாவம்சம் வரலாற்று நூலல்ல

## கட்டுக்கதைக் களஞ்சியம்

கி. மு. ஆறாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 3 ஆம் நூற்றாண்டு வரையிலான காலப் பகுதியில் (ஏறத்தாழ 900 ஆண்டுகளில்) நடந்ததாகக் கூறப்படும் நிகழ்வுகளை வைத்து கி. பி. 5 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மகாநாம என்ற புத்த பிக்குவால் எழுதப்பட்டது தான் மகாவம்சம் 1100 ஆண்டுகளாக வழிவழியே வாய்மொழியாகக் கூறப்பட்டு வந்த கட்டுக்கதைகளைக் கருவாக வைத்தே மகாவம்சம் எழுதப்பட்டுள்ளது.

இதிற் குறிப்பிடப்படும் தொடக்க கால மன்னர்களின் ஆட்சிக்காலங்கள் பற்றிய செய்திகள் நம்புதற்கரியவை; உண்மைக்கு மாறானவை.

37 ஆவது அகவையில் அரியணையில் அமர்ந்த பாண்டுகாபயன் 70 ஆண்டுகள் ஆட்சி நடத்தினான் என்று மகாவம்சம் கூறுகிறது. அது உண்மையாயின், தனது 107 ஆவது அகவை வரை அவன் ஆட்சி நடத்தியிருக்கவேண்டும்.

அவனது மூத்த மகனான மூத்த சிவன் 60 ஆண்டுகள் ஆட்சி நடத்தினான் எனக் கூறப்படுகிறது. அவனது தந்தையின் 37 ஆவது அகவையில் மூத்த சிவன் பிறந்திருந்தாலும் 130 அகவை வரை ஆட்சி நடத்தியிருக்கவேண்டும். மூத்தசிவனின் 2 ஆவது மகன் தேவநம்பியதீசன் 40 ஆண்டுகள் ஆட்சி நடத்தினான். மூத்த சிவனுக்கு 40 ஆவது அகவையில் தேவநம்பியதீசன் பிறந்திருந்தாலும் தேவநம்பியதீசன் 90 ஆவது அகவையிற்றான் ஆட்சியில் அமர்ந்திருக்கவேண்டும். அப்படியாயின் அவனும் 130 அகவைவரை ஆட்சியில் அமர்ந்திருக்கவேண்டும் அதையடுத்து ஒருவர் பின் ஒருவராக அவன் தம்பியர் மூவர் 30 ஆண்டுகள் ஆட்சி நடத்தியிருக்கின்றார்கள். இடையில் சேனன் குத்திகன் 22 ஆண்டுகள் ஆட்சி நடத்தியிருக்கின்றார்கள். தேவநம்பியதீசனுக்கு 52 ஆண்டுகளுக்குப்பின் (30+22) ஆட்சிப் பொறுப்பேற்ற அவன் தம்பி அசேலன் எல்லாளன் படையெடுத்து வந்து தோற்கடிக்கும் வரை, 10 ஆண்டுகள் ஆட்சி நடத்தியிருக்கின்றான். தேவநம்பியதீசனை விட 20 அகவை குறைந்தவன் என வைத்துக்கொண்டாலும் தேவநம்பியதீசன் ஆட்சிப்பொறுப்பேற்கும்போது அசேலன் 70 அகவையுடையவனாக இருந்திருப்பான். எனவே அசேலன் (70+40+52) 162 அகவையில் ஆட்சிப் பொறுப்பேற்று 10 ஆண்டுகள் (172 அகவை) வரை ஆட்சி நடத்தியிருக்கவேண்டும்.

புத்தரோடு விஜயனையும் இலங்கையையும் தொடர்புபடுத்தவேண்டும் என்பதற்காக புத்தர் மறைந்த அன்றுதான் விஜயன் இலங்கையில் கால்வைத்தான் என்றுகூறி, எல்லாளன் இலங்கைக்கு வந்ததுவரையுள்ள காலத்தை (338 ஆண்டு ஆட்சிக் காலத்தை) அதற்கேற்றவாறு ஒழுங்குசெய்து எழுதிவைத்திருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, 37 இயல்களில் ஏறத்தாழ 900 ஆண்டுகால வரலாற்று நிகழ்வுகளை எடுத்துக்கூறப் புகுந்த மகாவம்சத்தில், விஜயன் பற்றி 2 இயல்களில் எடுத்தியம்பப்படுகிறது. தேவநம்பியதீசன் காலத்துக்கு (40 ஆண்டுகளுக்கு) 10 இயல்கள் (பௌத்த இறைநெறி வருகை பற்றிய காலம்), துட்டகைமுனு பற்றிய காலத்துக்கு (40 ஆண்டுகளுக்கு) 11 இயல்கள் (தமிழர்கள் இந்துநெறி தோற்கடிக்கப்பட்டதெனக் கூறப்படும் காலம்) என 2 மன்னர்களின் 80 ஆண்டு (பௌத்த மேம்பாட்டுக்கால) வரலாற்றைக்கூற 21 இயல்களை ஒதுக்கிவிட்டு ஏறத்தாழ 48 மன்னர்களின் 441 ஆண்டு ஆட்சிக்கால வரலாற்றைக் கூறுவதற்கு 05 இயல்கள் மட்டுமே ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

இன்னொரு வகையாகப் பார்த்தால், தேவநம்பியதீசனைப் பற்றி 686 சொற்றொடரில் எடுத்துக்கூறிய மகாவம்சம், அவனுக்கு முன்னும் பின்னுமாக 112 ஆண்டுகள் ஆட்சி செய்த 6 மன்னர்கள் பற்றிய செய்திகளை வெறும் 17 சொற்றொடர்களிற் சுருக்கமாக முடித்துவிட்டது.

எனவே மகாவம்சம் என்பது வரலாற்றை மையமாக வைத்து எழுதப்பட்ட நூலல்ல என்பதும், பௌத்தத்தை மேம்படுத்தும் நோக்குடன் எழுதப்பட்ட கட்டுக்கதையில் ஆங்காங்கே சில வரலாற்றுக் குறிப்புக்கள் உள்ளன என்பதும் தெள்ளத்தெளிவாகிறது.

மகாவம்சம், எண்ணச் சிறகுகளை விரித்து மிகைப்படுத்தி எழுதப்பட்ட கதை என்பதை ''துட்டகைமுனுவின் உடல்நிலையை அறிய 96 கோடி புத்தபிக்குகள் கூடினர்'' (மகாவம்சம் 32 ஆவது இயல்) மகாசேதியத்துக்கு அடிக்கல் நாட்ட 13 இலட்சத்து 36 ஆயிரம் பிக்குகள் கூடினர்'' (31 ஆவது இயல்) தாதுபேழையை விழுங்கிய வாசுதத்தனின் உடல் சுற்றளவு நீளம் 1 யோசனை (10 மைல்), முடங்சிப் படுத்திருந்த அவனது உடலது விட்டத்தின் நீளம் 300 யோசனை (3000 மைல்) (31 ஆவது இயல்) என்பவை போன்ற கூற்றுக்களிலிருந்து தெரிந்துகொள்ள முடிகிறது. இவையனைத்தும் துட்டகைமுனுவின் வரலாற்றைக் கூறுகின்ற இயல்களில் உள்ளவை. இதிலிருந்து துட்டகைமுனுவைக் 'கதாநாயகனாக'க் கொண்டு அவனையும் பௌத்த இறைநெறியையும் (மதத்தையும்) உயர்த்திச் சொல்லவேண்டும், துட்டகைமுனு - எல்லாளன் போரை, சிங்கள பௌத்தர்கள் தமிழ் இந்துக்களை வெற்றிகொண்ட வரலாறாக எடுத்துக்காட்டவேண்டும். தமிழர்களை வன்கவர்வாளர்களாக (ஆக்கிரமிப்பாளராக) வும் சிங்களவர்களை இந்த நாட்டுக்கு உரித்துடையவர்களாகவும் காட்டவேண்டும், என்ற உள்ளார்ந்த நோக்கங்களோடு மகாவம்சத்தை எழுதியவர் எழுதியிருக்கிறார் என்பது நன்கு புலனாகின்றது. இதுபோன்றே பௌத்தத்தின் வருகை பற்றிக் கூறும் தேவநம்பியதீசன் பற்றிய 10 இயல்களிலும் புளுகு மூடைகள் அவிழ்த்துவிடப்பட்டுள்ளன.

அதனாற்றான் மகாவம்சத்தில் பௌத்தத்தின் மேன்மை, பௌத்த அரசர்களின் செயற்பாடுகள் தவிர, வட இலங்கை பற்றியோ, பௌத்தரல்லாத சிங்கள, தமிழ் மன்னர்களின் செயற்பாடுகள் பற்றியோ எவற்றையும் காணமுடியவில்லை.

தொன்மத்தில் (புராணத்தில்) வரும் கம்சன் கதை போன்று உயிர் அச்சத்தினால் தங்கையின் பிள்ளைகளை அழித்தொழிக்கும் மாமனின் கதையாகப் பாண்டுகாபயன் கதை மகாவம்சத்திலே கூறப்படுகிறது.

மனுநீதிச்சோழன் கதைபோன்று தன் ஒரே மகனை ஊர்தி உருளியில் (தேர்க்காலில்) போட்டு நெரித்துக் கொல்லும்படி மன்னன் கட்டளையிடுவதாக எல்லாளன் கதை மகாவம்சத்திலே கூறப்படுகிறது.

பாரதக் கதையிலும், மணிமேகலையிலும் வரும் அமுதசுரபி (அட்சயபாத்திர) க் கதைபோன்று பாண்டுகாபயன் - பாலி இளவரசி கதை மகாவம்சத்திலே கூறப்படுகிறது. இன்னும் இதுபோன்ற பல கதைகள் கூறப்படுகின்றன. இட்டுக்கட்டிய கதைதான் மகாவம்சம் என்பதற்கு இவையும் சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும்.

விஜயன்தான் முதன்முதலில் இலங்கையில் நாகரிகத்தை அறிமுகப்படுத்தியவன் என்றும் இலங்கையில் முதற் குடியேறிய மனிதன் விஜயனே என்றும், அதற்குமுன் மனிதர்கள் இலங்கையில் இருக்கவில்லை என்றும், மகாவம்சத்தை அடிப்படையாகக் கொண்டு பள்ளிகளில் மாணவர்களுக்கு வரலாறு புகட்டப்படுகிறது.

விஜயன் வந்ததாகக் கூறப்படும் காலத்துக்கு முன்னரே இலங்கையில் நாகரிகமான மக்கள் இருந்ததற்குப் பல தொல்லியற் சான்றுகள், இலக்கியச்சான்றுகள் உள்ளன; மகாவம்சத்திலுங்கூட இதுபற்றிக் கூறப்படுகிறது.

விஜயன் வருகை புரிந்ததாகக் கூறப்படுங் காலத்துக்கு முன்னர் பயன்படுத்தப்பட்ட ஈமத்தாழிகள் மனித எலும்புகள் போன்ற தடயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை

தமிழகத்திற் கண்டெடுக்கப்பட்ட தடயங்களை ஒத்ததாக இருப்பதால் இலங்கையில் விஜயன் வருகை புரிந்ததாகக் கூறப்படும் காலத்துக்கு முன்னரே தமிழர்கள் வாழ்ந்தார்கள் என்ற கருத்து நிறுவப்படுகிறது.

விஜயன் வருகைக்கு முன்னரே இலங்கையில் நாகதீபம், கல்யாணி, ஆகிய பகுதிகளில் நாகர்களின் அரசுகள் சிறப்புற இருந்ததாகவும் அவ்வரசர்களுக்கிடையே ஏற்பட்ட பிணக்கை, புத்தபெருமான் நேரில் வந்து தீர்த்துவைத்ததாகவும் மகாவம்சமே குறிப்பிடுகிறது: அதுமட்டுமன்றி, கல்யாணி (களனி) அரசனாக இருந்த நாக அரசன் மணியக்கியனின் அழைப்பின் பேரில் புத்தர் மூன்றாந் தடவை இலங்கைக்கு வந்தார் என்றும் மகாவம்சம் கூறுகிறது.

சிறந்த இலக்கண இலக்கியங்களைக் கொண்ட தமிழ்மொழிக்கு உரித்தானவனான எல்லாளன், சிங்களம் எழுத்து மொழியாக வளர்ச்சி பெற முன்னரே இலங்கைத்தீவிற் சிறப்புற ஆட்சி நடத்தினான். பாளியில் மகாவம்சம் எழுதப்படுவதற்கு முன்னரே சிங்களமொழி முறையான எழுத்துமொழியாவதற்கு முன்னரே. பௌத்தநெறி குறித்த மணிமேகலை போன்ற நூல்கள் தமிழ்மொழியில் வெளிவந்திருக்கின்றன. இந்நிலையிற் சிங்களவர்களின் முன்னோடியான விஜயன்தான் இலங்கைக்கு நாகரிகத்தைக் கொண்டு வந்தான் என்பது கேலிக்குரியது. மகாவம்சத்தின் கூற்றுப்படியும் சிங்களவர்களுக்கு இலங்கைத்தீவில் இருக்கும் உரிமைகள் அனைத்தும் தமிழ் மக்களுக்கும் இருக்கின்றன.

700 பேருடன் விஜயன் இலங்கைக்கு வந்திறங்கிய சில நாட்களில் (ஓராண்டுக்குள் பாண்டிய நாட்டிலிருந்து இளவரசியும் 700 இளம்பெண்களும் கைவினைக்கலைஞர்களும் பதினெண் குடிகளைச் சேர்ந்த 1000 குடும்பங்களுமென (விஜயனோடு வந்தவர்களை விடப் பலமடங்கு கூடுதலான தமிழர்கள்) வந்து குடியேறியிருக்கிறார்கள் என்று மகாவம்சம் கூறுகிறது.

இவ்வாறே காலத்துக்குக்காலம் வட இந்தியாவிலிருந்து இலங்கைக்கு வந்திருப்பதாக மகாவம்சம் கூறும் மக்கள் எண்ணிக்கையை விட, தமிழகத்திலிருந்து வந்த தமிழ்மக்கள் தொகை மகாவம்சக் கூற்றுப்படியே பலமடங்கு கூடுதலாகும்.

## மகாவம்சத்தின் இருட்டடிப்பு

மகாவம்சம் தேரவாத பௌத்தத்தின் மேன்மையையும் தேரவாத பௌத்த அரசர்களின் செயற்பாடுகளையுமே எடுத்துக்கூறுகின்றது. இலங்கையை ஆண்ட தமிழ் அரசர்களின் செயற்பாடுகளைப் பற்றி, தேரவாத பௌத்தரல்லாத சிங்கள அரசர்களின் செயற்பாடுகள் பற்றி இயன்றவரை இருட்டடிப்புச் செய்துள்ளது; அல்லது திட்டித்தீர்த்துள்ளது.

மகாவம்சம் எடுத்துக்கூறிய சில தமிழ் அரசர்களின் பெயர்கள் தேரவாத பௌத்த அரசர்களின் பெயர்களைப் பெருமைப்படுத்தவும் தமிழர்களை வன்கவர்வாளர்களாக (ஆக்கிரமிப்பாளர்களாகக்) காட்டவும், பௌத்தர்கள் (சிங்களவர்கள்) இந்துக்களை (தமிழர்களை) வெற்றிகொண்டதாகக் காட்டவுமே பயன்பட்டுள்ளமை தெளிவாகின்றது.

மகாயான பௌத்தநெறியைப் பின்பற்றிய 1 ஆம் கஜபாகு பற்றி இருட்டடிப்புச் செய்த மகாவம்சம், இன்னொருபுறம் மகாயான பௌத்த சிங்கள அரசர்களைத் திட்டித் தீர்த்திருக்கிறது.

அநுராதபுரம் தவிர ஏனைய பகுதிகளில், குறிப்பாக வடபகுதியில் நிலவிய தமிழர் அரசுகள் பற்றி முற்றாக இருட்டடிப்புச் செய்த மகாவம்சம் துட்டகைமுனுவைப் பெருமைப்படுத்துவதற்காக ஒரு இடத்தில் மட்டும் அநுராதபுரத்துக்குத் தெற்கே 32 தமிழ் அரசுகள் இருந்தமை பற்றிக் கூறியிருக்கிறது.

## மகாவம்ச முரண்பாடுகள்

★ விகாரமாதேவி பௌத்தநெறிமீது பற்றுக்கொண்டொழுகிய நற்குணமுள்ள பெண் என்றும் ஒரு பௌத்தநெறிக் குரவர் (மதகுரு) தன் வயிற்றிற் பிறக்கவேண்டும் என்று அவள் அவாவுற்றாள் என்றும் கூறும் மகாவம்சம், மனித நேயத்தையும் கொல்லாமையையும் எடுத்தியம்பும் பௌத்தநெறியைக் கடைப்பிடித்தொழுகும் விகாரமகாதேவி, தமிழ் மன்னனின் படைத்தலைவனின் (தளபதியின்) தலையை வெட்டி, வெட்டிய வாளிலிருந்து வடியும் குருதியை வெட்டப்பட்ட தலையின்மீது குந்தியிருந்து பருகவேண்டும் என்று பேரவாக் கொண்டிருந்தாள் என்றும் எடுத்துக் கூறுகிறது.

★ தனது ஊர்தியின் உருளி (தேர்ச்சில்லு) உராய்ந்ததால் பௌத்த விகாரைச் சுவரின் 15 செங்கற்கள் பெயர்ந்து விட்டது என்று மனம்வருந்தி தன்தலையையும் அவ்வாறே பெயர்க்குமாறு எல்லாள மன்னன் கூறினான் என்று கூறுகின்ற மகாவம்சம், எல்லாளன் ஆட்சியில் குடிமக்களால் பௌத்த விகாரைகளுக்குத் தூய்மைக்கேடு ஏற்பட்டது என்றும் கூறுகிறது.

★ கலிங்கப் போரில் 10,0000 படை வீரர்களின் உயிர் பறிக்கப்பட்டமையை எண்ணி மனம் வருந்திப் போரை வெறுத்துத்தான் அசோகன் பௌத்தநெறியைத் தழுவினான் என்று கூறப்படுகிறது. அந்த அசோகன் வழியில் பௌத்தநெறியைப் பின்பற்றுவதாகக் கூறப்படும் இலங்கை பௌத்த தேரர்கள், ''பௌத்தநெறியைச் சாராதவர்கள் மனிதராக மதிக்கப்படக்கூடாதவர்கள் விலங்குகளை விடக் கீழானவர்கள் அவர்களைக் கொல்வது பாவம் அல்ல'' என்று கூறுவதாக இன்னொரு புறம் கூறுகிறது;

(மகாவம்சம் 25: 109 - 112)

★ போரே கூடாது என வெறுத்தே பௌத்தத்தில் இணைந்தான் அசோகன். ஆனால், பௌத்தத்துக்காகப் போர் என்று பௌத்தநெறியைத் தூண்டி முறையற்ற சூழ்ச்சிப் போரில் ஆட்சியைப் பிடித்த துட்டகைமுனுவை காவியத் தலைவனாகப் போற்றுகின்றது மகாவம்சம்.

## மகாவம்ச மாயை விலகுகிறது

தொல்லியல் ஆய்வுகளின்போது அண்மையிற் கிடைக்கப்பெற்ற தொல்பொருட் சான்றுகளினால் மகாவம்சத்தின் தொடக்க இயல்களில் (அத்தியாயங்களில்) குறிப்பிடப்படும் இலங்கையின் தொன்மை வரலாறு, தொல்குடி என்பவை பற்றிய கூற்றுக்கள் மாற்றப்பட வேண்டிய, மறுக்கப்படவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது என, களனிப் பல்கலைக்கழகத்தின் தொல்பொருள் ஆய்வுக்கான பட்டப்பின்படிப்பு நிலையத்தினால், கலாச்சார முக்கோணப் பிரதேசத்தில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் தெரிவிக்கின்றன. இதனால் பள்ளிகளின் வரலாற்றுப் பாடநூல்களில் மாற்றங்கள் செய்யவேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டிருக்கிறது என வரலாற்று வல்லுநர்கள் கருதுகின்றனர்.

தமது வரலாற்றுச் சான்றும் அடித்தளமும் எனச் சிங்கள பௌத்தர்களாற் கருதிப் போற்றப்பட்டுவந்த, மகாவம்சத்தைச் சுட்டெரிக்கவேண்டும் என்றும் அதை வரலாற்று நூலாக ஏற்றுக்கொள்ள இயலாது என்றும் சிங்கள அறிஞர்களிடமிருந்தே கருத்துக்கள் தோன்றத் தொடங்கியிருக்கின்றன. சிங்கள மக்களால் 'தத்துவஞானி' என்றும் 'சிந்தனையாளர்' என்றும் போற்றப்படும் கலாநிதி. E. W. அதிகாரம் அவர்கள் மகாவம்சம் சுட்டெரிக்கப்படவேண்டும் எனச் செய்தித்தாள்களுக்குத் துணிந்து அறிக்கை விடுத்திருக்கிறார். சிங்கள எழுத்தாளர் சிறிலால் கொடிகார மகாவம்சம் பற்றிய தனது மதிப்பீட்டு நூலில் மகாவம்சம் வரலாற்று நூலாகக் கருதக் கூடிய நூலல்ல என்று கூறுகின்றார். ''பூர்வீக இலங்கையிற் சிங்கள - தமிழ் உறவுகள்'' என்ற ஆய்வு நூலை எழுதிய லயனல் சரத் அவர்கள் மகாவம்சத்தின் உள்நோக்கக் கருத்தை உடைத்துக் காட்டியுள்ளார். இவ்வாறு நடுநிலையும் மனித நேயமும் கொண்ட மேலும் பல சிங்கள அறிஞர்களும் வரலாற்று ஆய்வாளர்களுங்கூடத் தமது கருத்துக்களை வெளிப்படுத்தத் தொடங்கியிருக்கின்றனர்.

'இலங்கைத்தீவு சிங்கள பௌத்தர்களின் நாடு' - 'தமிழர்கள் நாட்டைக் கைப்பற்ற வந்த வந்தேறு குடிகள்" என்று இதுவரை மாணவர்களிடையே விதைக்கப்பட்டு வந்த நச்சு விதைக்கு அடிப்படையான மகாவம்சத்தின் 'மாயத்திரை" விலகத் தொடங்கியிருக் றெது?

பயிற்சி:

01) எக்காலத்துக்குட்பட்ட நிகழ்வுகளை மகாநாமர் மகாவம்சத்தில் எழுதியுள்ளார்? மகாநாமதேரர் வாழ்ந்த காலம் எது?

02) மகாவம்சக் கூற்றுப்படி,

பாண்டுகாபயன் எத்தனையாம் அகவை வரை ஆட்சிநடத்தியிருக்க வேண்டும்?

மூத்தசிவன் எத்தனையாம் அகவை வரை ஆட்சிநடத்தியிருக்கவேண்டும்?

தேவநம்பியதீசன் எத்தனையாம் அகவை வரை ஆட்சிநடத்தியிருக்கவேண்டும்?

அசேலன் எத்தனையாம் அகவை வரை ஆட்சிநடத்தியிருக்கவேண்டும்?

இவற்றிலிருந்து நீர் அறிந்துகொள்வது யாது?

03) தேவநம்பியதீசன், துட்டகைமுனு ஆகிய 2 சிங்களமன்னர்களின் 80 ஆண்டுகால வரலாற்றைக்கூற 21 இயல்களை ஒதுக்கிய மகாவம்சம் 48 மன்னர்களின் 441 ஆண்டுகால வரலாற்றைக்கூற 5 இயல்களை மட்டும் ஒதுக்கியதேன்?

04) தேவநம்பியதீசனின் 40 ஆண்டுகால நிகழ்வுகளை 686 சொற்றொடர்களிற் கூறிய மகாவம்சம், அவனுக்கு முன்பின்னாக ஆட்சிநடத்திய 6 மன்னர்களின் 112 ஆண்டு கால நிகழ்வுகளை 17 சொற்றொடர்களில் மட்டும் கூறுவதேன்?

05) மகாவம்சத்தில் மிகைப்படுத்திக் கூறப்பட்டுள்ள நிகழ்வுகள் நான்கைக் குறிப்பிடுக:-

06) ''விஜயன்தான் இலங்கைக்கு நாகரிகத்தைக் கொண்டு வந்தான்'' என்ற மகாவம் சத்தின் கூற்றுக்கு மாறாகத் தற்போது கிடைத்துள்ள சான்றுகளைக் கூறுக?

07) புத்தரின் 3 வருகைகள் பற்றி விரிவாகக் கூறுக?

08) வடநாட்டிலிருந்து வந்த விஜயனின் குழுவினரைவிடக் கூடுதலான தமிழ் மக்கள் இலங்கைக்கு வந்தது பற்றி மகாவம்சம் குறிப்பிடும் தகவல்களை எடுத்துக்கூறுக:-

09) மகாவம்சம் எவற்றை இருட்டடிப்புச் செய்துள்ளது?

10) மகாவம்சத்தின் முரண்பாடுகளை விளக்கும் நிகழ்வுகள் நான்கைத் தருக?

11) 'மகாவம்சம் சுட்டெரிக்கப்படவேண்டும்' என்று குறிப்பிட்ட சிங்கள வரலாற்றறிஞர் யார்?

12) ''மகாவம்சம் வரலாற்று நூலாகக் கருதக்கூடிய நூலல்ல'' என்று மதிப்பீடு செய்த சிங்கள அறிஞர் யார்?

13) 'பூர்வீக இலங்கையில் சிங்கள தமிழ் உறவுகள்' என்னும் நூலை எழுதி மகாவம் சத்தின் உள்நோக்கக் கருத்துக்களை உடைத்த சிங்கள எழுத்தாளர் யார்?

இயல் - 3

# போர்த்துக்கேயர் இலங்கையில் வேரூன்றிய வரலாறு

**1505** இல் போர்த்துக்கேயர் இலங்கைத்தீவில் முதன்முதற் காலடி எடுத்து வைத்தபோது யாழ்ப்பாண அரசு, கண்டி அரசு, கோட்டை அரசு என மூன்று அரசுகள் இருந்தன. இவற்றில் யாழ்ப்பாண அரசைத் தமிழர்களும், கோட்டை, கண்டி அரசுகளைச் சிங்களவர்களும் ஆண்டுவந்தனர். யாழ்ப்பாண - கண்டி அரசுகளுக்கிடையே இருந்த வன்னிப்பகுதி வன்னிக் குறுநில அரசாகத் தமிழர்களால் ஆளப்பட்டு வந்தது.

பெரும்பாலும் யாழ்ப்பாண அரசர்கள் கைகளும், ஒருசில காலங்களிற் சிங்கள அரசர்களின் கைகளும் ஓங்கியிருந்தன. யாழ்ப்பாணத் தமிழ் அரசர்களுக்குச் சிங்கள அரசர்கள் பலர் திறை செலுத்தி வந்திருக்கின்றனர்.

தென்னிந்தியாவின் கோவாவிலிருந்த போர்த்துக்கேய ஆளுநர் (தேசாதிபதி) டொன் லோறன்சோ டி அல்மெய்டா கடற்செலவின் (பயணத்தின்) போது புயற்காற்றிற் சிக்குண்டு 1505 இல் இலங்கைத்தீவின் கரைக்கரையை அடைந்த வேளையில், 8 ஆம் வீர பராக்கிரமபாகு கோட்டைப்பகுதியை ஆண்டு வந்தான்.

எதிர்பாராத நிலையில் இலங்கை வந்த போர்த்துக்கேயர் தமது வாணிபப் பொருட்களான கறுவா, ஏலம், மிளகு போன்ற நறுமணப்பொருட்கள் (வாசனைத்திரவியங்கள்) பெருமளவில் இருப்பதைக்கண்டு பெருமகிழ்ச்சியடைந்தனர். இலங்கையுடன் வணிகத் தொடர்பு வைக்க ஆர்வம்கொண்டு, கறுவா வணிகத்தை மேற்கொள்வதற்கும், கொழும்புக்கருகே களஞ்சியக் கோட்டை ஒன்றைக் கட்டிக்கொள்வதற்கும் கோட்டை அரசனுடன் உடன்படிக்கை செய்துகொண்டு கொழும்பிற் காலூன்றினர்.

1521 இல் கோட்டை அரசனாக இருந்த 5 ஆம் விஜயபாகுவின் புதல்வர்களான 7 ஆம் புவனேகபாகு, றைகம்பண்டார, மாயாதுன்னை ஆகிய மூவரும் தமது தந்தை தமக்கு ஆட்சியைத் தரப்போவதில்லை என்பதை உணர்ந்தனர். எனவே தமது தந்தையைக் கொன்று கோட்டை அரசை மூன்றாகப் பிரித்துத் தமக்குட் பங்கிட்டுக் கொண்டனர். கோட்டைப் பகுதியை 7 ஆம் புவனேகபாகுவும், றைகம பகுதியை றைகம்பண்டாரவும், சீதவாக்கையை மாயாதுன்னையும் எடுத்துக்கொண்டனர்.

அவர்களில் இளையவனான மாயாதுன்னை தனக்குக் கிடைத்த சீதவாக்கையுடன் மனநிறைவுபெறாது, இலங்கைத்தீவு முழுவதையும் தானே ஆளவேண்டும் என்று பேரவாக் கொண்டான். முதலிற் கோட்டை அரசு முழுவதையும் தன் ஆட்சியின் கீழ் கொண்டுவர எண்ணி, 1527 இல், தன் அண்ணன் 7 ஆம் புவனேகபாகு மீது படையெடுத்தான்.

கறுவா வணிகத்துக்கு இடமளித்ததன் பேரில் ஏற்கனவே போர்த்துக்கேயரின் நட்பைப் பெற்றிருந்த 7 ஆம் புவனேகபாகுவுக்குக் கோவாவிலிருந்து படையுதவி கிடைக்கலாம் என்பதை மாயாதுன்னை அறிந்துகொண்டான். எனவே அவன் போர்த்துக்கேயரின் பகைவரான கள்ளிக்கோட்டை அரசனான சாமோரினினது உதவியை நாடினான்.

தமது நலன்களைப் பேணிவந்த 7 ஆம் புவனேகபாகுவின் ஆட்சியைக் காப்பாற்றுவதற்குப் போர்த்துக்கேயர் முன்வந்தனர். தமது பகைவர்களின் பகைவன் என்ற வகையில் மாயாதுன்னைக்குத் துணையாக சாமோரினினது படையணிகளும் வந்தன.

7 ஆம் புவனேகபாகுவுக்கும் - மாயாதுன்னைக்குமிடையே ஏற்பட்ட போரில் உதவிக்கு வந்த படைகளில், போர்த்துக்கேயரின் படைவலுவானதாக இருந்ததனால் மாயாதுன்னை தோல்வியுற்றுச் சீதவாக்கைக்குப் பின்வாங்கவேண்டியேற்பட்டது.

சீதவாக்கையின் தலைநகர் வரை தன்னைத் துரத்தி வந்த போர்த்துக்கேயப்படையினரிடம் மாயாதுன்னை அடைக்கலம் புகுந்தான். போர்த்துக்கேயர் இட்ட கட்டுப்பாடுகளை ஏற்ற மாயாதுன்னை தன்னைக்காப்பாற்றுவதற்காகத் தனக்குப் பேரிடர் வேளையில் வந்துதவிய - சாமோரினின் படைத்தலைவர் (தளபதி) களது தலைகளைக் கொய்து போர்த்துக்கேயரிடம் ஒப்படைத்தான். இதற்கிடையில் மாயாதுன்னையின் இளைய அண்ணன் றைகம்பண்டார இறந்துவிடவே அவனது றைகம பகுதியைச் சீதவாக்கையுடன் இணைத்து மாயாதுன்னை தனதாக்கிக்கொண்டான்.

சிங்கள அரசகுல வழக்கப்படி அரசனுக்குப்பின் அவனது உடன் பிறந்தவர்களுக்கே ஆட்சியுரிமை சென்றடையும். மூப்படைந்த 7 ஆம் புவனேகபாகு தனக்குப்பின் தனது அரசு தனது தம்பி மாயாதுன்னைக்குச்சென்றுவிடக்கூடாது என்று முடிவெடுத்தான். எனவே தனது மகள் வயிற்றுப் பேரனான தர்மபாலவை அடுத்து அரசனாக்கும் முயற்சியில் இறங்கினான். தர்மபால ஆட்சியைப் பெற்றாலும், தான் இல்லாத காலத்தில் மாயாதுன்னை அவனைத் தோற்கடித்து ஆட்சியைக் கவர்ந்து விடுவானென எதிர்பார்த்த 7 ஆம் புவனேகபாகு, தர்மபாலவின் ஆட்சிக்குப் போர்த்துக்கேயரின் துணை நிலைத்திருக்கச் செய்யவும் வழிவகைகளைத் தேடலானான்.

போர்த்துக்கேயரும், தம்மீது நீண்டகாலமாகப் பகைமை பாராட்டிச் சண்டை செய்துவந்த மாயாதுன்னை கோட்டைக்கு அரசனாக வருவதை விரும்பாததாலும் 7 ஆம் புவனேகபாகு அவர்களின் விருப்புக்கேற்பச் செயற்பட்டு வந்ததாலும், 7 ஆம் புவனேகபாகுவின் விருப்பை நிறைவேற்ற முன்வந்தனர்.

7 ஆம் புவனேகபாகு தனது பேரனின் தங்கஉரு ஒன்றைச்செய்து, போர்த்துக்கல் நாட்டு அரசனான மூன்றாம் ஜோனிடம் அனுப்பி, அந்த உருவுக்கு முடிசூட்டிக் கோட்டையின் ஆட்சியில் தர்மபாலவை அமர்த்துமாறு வேண்டுகோள் விடுத்தான். இந்தச் செய்கையினூடாக, 7 ஆம் புவனேகபாகு போர்த்துக்கேய மன்னனின் மேலாளுகையை ஏற்றுக் கொண்டான்.

அதனுடன், போர்த்துக்கல் மன்னனை மகிழ்விப்பதற்காக, போர்த்துக்கேயரின் கத்தோலிக்க நெறியை (மதத்தை) இலங்கையிற் பரப்புவதற்கு இறைநெறிக் குரவர்களை (மதகுருமாரை) அனுப்பிவைக்குமாறும் வேண்டிக்கொண்டான்.

நறுமணப் (பொருள் வாசனைத் திரவிய) வணிகத்தைப் பெருக்குவதையும், தமது இறைநெறியை (மதத்தை)ப் பரப்புவதையுமே நோக்காகக் கொண்டிருந்த போர்த்துக்கேயர், கிடைத்த வாய்ப்பை நன்கு பயன்படுத்தினர். இறைநெறிக்குரவரை (மதகுருமாரை) வரவழைத்து இலங்கையிலே தமது இறைநெறியை (மதத்தை) வளர்ப்பதில் ஆர்வங் காட்டினர்.

இறைநெறிப் பரப்புரை (மதப்பிரச்சாரம்) என்ற பெயரில் தமிழ் மண்ணிற் காலூன்றப் போர்த்துக்கேயர் எடுத்த முயற்சிகளை யாழ்ப்பாண மன்னன் 1 ஆம் சங்கிலியன் மன்னாரில் முறியடித்தான்.

இதனையடுத்து மன்னார்ப் பகுதியைக் கோட்டை அரசன் 7 ஆம் புவனேகபாகுவின் பேரனான தர்மபாலவுக்குப் பெற்றுக்கொடுக்க வகை செய்யுமாறும், முத்துச் சலாபத்தைத் தன்னிடம் தருமாறும் கோவாவிலிருந்த அந்திரே. டீ சூசா என்பவன் போர்த்துக்கேய மன்னன் 3 ஆம் ஜோனுக்குக் கடிதம் எழுதினான்.

தர்மபாலவும், யாழ்ப்பாண அரசைத் தனக்குப் பெற்றுத் தருமாறு போர்த்துக்கேய மன்னன் உதவியை நாடிக் கடிதம் எழுதினான்.

ஆயினும் யாழ்ப்பாண மன்னன் 1 ஆம் சங்கிலியன் போர்த்துக்கேயருக்கு அடங்க மறுத்தது மட்டுமின்றி, கண்டி மன்னன் போர்த்துக்கேயருக்குக் கப்பலில் யாழ்ப்பாண அரசின் கடற்பகுதிக்கூடாக அனுப்பிய செல்வங்களையும் (1544 நவம்பர் 5 ஆம் நாள்) பறிமுதல் செய்தான். மேற்கொண்டும் தனது கடற்பகுதியூடாகப் போர்த்துக்கேயருக்கு என்ன அனுப்ப முயன்றாலும் அவை பறிமுதல் செய்யப்படும் எனவும் எச்சரித்தான்.

அதுமட்டுமின்றி, போர்த்துக்கேயரோடு இணைந்து செயற்பட்ட 7 ஆம் புவனேக பாகுவுக்கு எதிராக மாயாதுன்னையுடன் கூட்டுச் சேர்ந்தான்; போர்த்துக்கேயருக்கெதிராக மாயாதுன்னை நடத்திய போருக்குப் படையுதவி நல்கினான்.

தன்படையினருடனிருந்த 7 ஆம் புவனேகபாகு, மாயாதுன்னையின் தூண்டுதலின் பேரில் போர்த்துக்கேயவீரன் ஒருவனால் எதிர்பாராத வகையிலே (1551 இல்) சுட்டுக் கொல்லப்பட்டான். அதனையடுத்து அவன் பேரன் தர்மபால கோட்டை அரசனாக்கப் பட்டான். அவன் சிறுவனாக இருந்தமையினால் அவனது தந்தையும் 7 ஆம் புவனேக பாகுவின் மருமகனுமாகிய விதியபண்டார (பாது) காவலனாக இருந்து ஆட்சியை நடத்தி வந்தான்.

இந்நிலையில், போர்த்துக்கேயர் தம்படை வலுவைப் பெருக்க மேற்கொண்ட முயற்சிக்கும் தர்மபாலவைக் கத்தோலிக்க நெறிக்கு மாற்ற எடுத்துக்கொண்ட முயற்சிக்கும் விதியபண்டார முட்டுக்கட்டையாக இருந்தான். (விதியபண்டார உயிருடன் இருந்த வரை தர்மபாலவைக் கத்தோலிக்க நெறிக்கு மாறவிடவில்லை) இதனால், துணிச்சலும் திறமையும் மிக்க விதியபண்டாரவுக்கும் போர்த்துக்கேயருக்குமிடையே பிணக்குகள் ஏற்பட்டன.

ஆட்சியை அடையவேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் மட்டுமே செயற்பட்டு வந்த மாயாதுன்னை, இச்சூழ்நிலையைப் பயன்படுத்தி (1555 இல்) போர்த்துக்கேயரோடு இணைந்து விதியபண்டாரவை எதிர்த்துப் போரிட்டான்.

போரிலே தோல்வியுற்ற விதிய பண்டார சப்தகோறளைக்குப் பின்வாங்கிச் சென்றான். அங்கும் மாயாதுன்னை துரத்திச் செல்லவே விதிய பண்டார, தன்னிடமிருந்த செல்வங்களுடன் புகலிடம் தேடி யாழ்ப்பாணம் சென்றான். சங்கிலியன் அவனுக்குப் புகலிடங் கொடுத்ததுடன் அவனுடன் இணைந்து போர்த்துக்கேயருடன் போரிடுவதற்காகப் படைகளைத் திரட்டிப், போருக்கான ஒழுங்குகளை மேற்கொண்டான். அந்த நேரத்தில் எதிர்பாராத வகையில் ஏற்பட்ட குண்டுவெடிப்பையடுத்து விதியபண்டார உயிரிழந்தான்.

போர்த்துக்கேயரின் உதவியை வலுப்படுத்திக் கொள்வதற்காகக் கோட்டையில் பொம்மை அரசனாக இருந்த தர்மபால தன்தந்தையாகிய விதியபண்டார இறந்ததும் கத்தோலிக்க நெறிக்கு (மதத்துக்கு) மாறித் தன் பெயரையும் தொன்சுவான் என மாற்றிக் கொண்டான். இதனாற் சிங்கள மக்களின் துணையையும் மதிப்பையும் இழந்தான். சிங்கள மக்கள் தமது இறைநெறியை (மதத்தை)க் காக்கும் பொருட்டுச் சீதவாக்கை மன்னனான மாயாதுன்னைக்கு உதவத்தலைப்பட்டனர்.

1561 இல் யாழ்ப்பாணத்திற் போர்த்துக்கேயர் போர் நடத்திய சூழ்நிலையைப் பயன்படுத்திய மாயாதுன்னை தர்மபாலவுக்கு உதவிய போர்த்துக்கேயப் படையுடன் போர்தொடுத்தான். யாழ்ப்பாண மன்னன் 1 ஆம் சங்கிலியன் (1519 - 1565) போர்த்துக்கேயருக்கெதிராகப் போரிட்ட மாயாதுன்னையின் படைகளுக்கு உதவினான். போர்த்துக்கேயர் அதே காலத்தில் இந்தியாவிலும் போரில் ஈடுபட்டிருந்ததால் 1565 இல் அவர்கள் கோட்டைப்பகுதியைக் கைவிட்டுக் கொழும்பை மட்டுமே காக்க முடிந்தது. கொழும்பு தவிர்ந்த கோட்டைப்பகுதியைக் கைப்பற்றிய மாயாதுன்னை அதனைச் சீதவாக்கையுடன் இணைத்துக்கொண்டான்.

மாயாதுன்னை இறந்ததும் அவனுடைய மகன் 1 ஆம் இராசசிங்கன் 1581 இல் சீதவாக்கை கோட்டைப் பகுதிகளுக்கு அரசனானான். 1 ஆம் இராசசிங்கன் கொழும்பைக்

கைப்பற்ற எடுத்துக்கொண்ட முயற்சிகள் தொடர்ந்து கைகூடாமற் போகவே கண்டி அரசின் மீது தன்பார்வையைத் திருப்பினான்.

1582 இல் கண்டிமீது படையெடுத்த 1 ஆம் இராசசிங்கன் கண்டியரசனாக இருந்த கரலியட்ட பண்டாரவைத் தோற்கடித்து, கண்டியைத் தனது ஆட்சியோடு சேர்த்துக் கொண்டான். போரில் தோல்வியுற்ற கரலியட்ட பண்டார போர்த்துக்கேயரிடம் சென்று அடைக்கலம்புகுந்ததோடு, மகளையும் மருமகனையும் அவர்களிடம் ஒப்படைத்துவிட்டு இறந்துபோனான். கரலியட்ட பண்டாரவின் மகளும், மருமகனும் கத்தோலிக்க நெறிக்கு (மதத்துக்கு) மாறி, தொனாகதரினா, தொன்பிலிப் எனத் தமது பெயர்களையும் மாற்றிக்கொண்டனர்.

1587 இல் 1 ஆம் இராசசிங்கன் மீண்டும் கொழும்பைக் கைப்பற்ற முயன்று தோல்வியுற்றான். 1 ஆம் இராஜசிங்கனின் தொடர்ச்சியான போர் நடவடிக்கைகளினால், அவன் மக்களின் வெறுப்புக்குள்ளானான். அந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கண்டியை 1 ஆம் இராஜசிங்கனிடமிருந்து மீட்டு தொன்பிலிப்பை அரசனாக்கும் முயற்சியில் போர்த்துக்கேயர் இறங்கினர்.

1 ஆம் இராசசிங்கனின் பகைவனான கோணப்பு பண்டார என்பவனைக் கண்டிக்கு அனுப்பிய போர்த்துக்கேயர் தொன்பிலிப்பை அரசனாக்கும்படி உதவிகள் புரிந்தனர். கோணப்பு பண்டாரவும் கத்தோலிக்க நெறிக்கு (மதத்திற்கு) மாறித் தன்பெயருக்கு முன்னால் தொன்சுவான் என்னும் பெயரையும் சேர்த்துக்கொண்டான்.

போர்த்துக்கேயரின் உதவியுடன் கோணப்புபண்டாரவால் கண்டியரசனாக்கப்பட்ட தொன்பிலிப்பு சிலநாட்களில் இறந்தான். அதனையடுத்து அவனுக்கு உதவியாக இருந்த போர்த்துக்கேயர்களைச் சிறையில் அடைத்த தொன்சுவான் என்ற கோணப்பு பண்டார தானே கண்டிக்கு அரசனான். அரசனான பின் மீண்டும் பௌத்த நெறிக்கு (மதத்திற்கு) மாறி விமலதர்மசூரியன் எனத் தன் பெயரையும் மாற்றிக் கொண்டான்.

1592 இல் கண்டியை மீண்டும் கைப்பற்றுவதற்காகப் படையெடுத்த 1 ஆம் இராசசிங்கன் தோல்வியுற்றுத் திரும்பி வருகையில காலில் ஏற்பட்ட புண்ணினால் அடுத்த ஆண்டிலேயே இறந்தான். 1 ஆம் இராசசிங்கன் இறந்ததும் சீதவாக்கையில் ஏற்பட்ட குழப்பத்தைப் பயன்படுத்திய போர்த்துக்கேயர் சீதவாக்கை, கோட்டைப் பகுதிகளைக் கைப்பற்றித் தர்மபாலவிடம் ஒப்படைத்தனர்.

இதனால் றைகம, கோட்டை, சீதவாக்கைப் பகுதிகள் முழுவதும் போர்த்துக்கேயரின் பொம்மை அரசனான தர்மபாலவின் ஆட்சியின் கீழ்க் கொணடுவரப்பட்டன. நாட்டுப் பற்றோ, இனப்பற்றோ, சிறிதுமற்ற தர்மபால தனக்கு வழித்தோன்றல் இல்லாததால் தனது இறுதிக்கால நலனைக் கருதி, தனக்குப்பின் ஆட்சி போர்த்துக்கேயரைச் சேர வேண்டும் என்று எழுதிக்கொடுத்தான். 1597 இல், தர்மபால இறந்ததும் அவனது ஆட்சியைப் போர்த்துக்கேயர் சட்டப்படி கைப்பற்றித் தமதாக்கிக் கொண்டனர்.

கண்டிமீது படையெடுத்த போர்த்துக்யேர் கண்டியை ஆண்ட விமலதர்மசூரியனைத் தோற்கடித்துத் தமக்குத் துணையாயிருந்தவளும், பழைய கண்டியரசனின் மகளுமாகிய தொனாகதரினாவிடம் ஆட்சியை ஒப்படைத்தனர். விமலதர்மசூரியன் மீண்டும் படையெடுத்துப் போர்த்துக்கேயரை முறியடித்துத் தொனாகதரினாவை மணந்து ஆட்சியைத் தனதாக்கிக்கொண்டான்.

ஏற்கெனவே யாழ்ப்பாண அரசனாக 1 ஆம் சங்கிலியன் போர்த்துக்கேயர்களையும் அவர்களால் இறைநெறி (மதம்) மாற்றப்பட்டவர்களையும் கடுமையாக ஒறுத்ததனால் (தண்டித்ததனால்), போர்த்துக்கேயர் யாழ்ப்பாண அரசின்மீது கடும் சீற்றங் கொண்டிருந்தனர்.

அதுமட்டுமின்றி யாழ்ப்பாண அரசனாக இருந்த 1 ஆம் சங்கிலியனும், அவனுக்குப் பின்வந்த தமிழ் அரசர்களும் போர்த்துக்கேயருக்கு எதிராகச் சிங்கள அரசர்கள், நடத்

திய படையெடுப்புகளுக்குத் தொடர்ந்து உதவியளித்து வந்தனர். அதனுடன், சிங்கள அரசர்களுக்கு உதவும் வகையில் தென்னிந்தியாவிலிருந்து வந்த படைகளை யாழ்ப்பாண அரசுப் பகுதியினூடாகச் செல்வதற்கு இடமளித்தனர். இந்நடவடிக்கைகளினாற் சீற்றங் கொண்ட போர்த்துக்கேயர், யாழ்ப்பாண அரசையும் தாம் கைப்பற்றினாற்றான் தமது வாணிபத்தையும், ஆட்சியையும் எவ்வகை இடையூறுகளுமின்றித் தொடர முடியும் என்று உணர்ந்தனர்; இதனால் யாழ்ப்பாண அரசையும் கைப்பற்றக் கடும் முயற்சியில் இறங்கினர்,

யாழ்ப்பாணத்தின் மீதான போர்த்துக்கேயரின் படையெடுப்புக்களின்போது, அவர்களின் படைகளிற் போர்த்துக்கேயரை விடக் கூடுதலான அளவிலே சிங்களக் கூலிப்படைகள் பங்குகொண்டன. இவ்வாறு சிங்களக் கூலிப்படைகளின் துணையோடு 1619 இல், போர்த்துக்கேயர் யாழ்ப்பாண அரசனை வெற்றிகொண்டனர். ஆயினும் இரு ஆண்டுகள் மக்களும் தஞ்சைப் படையினரும் தொடர்ச்சியாக மேற்கொண்ட கிளர்ச்சிகளை அடக்கி 1621 ஆம் ஆண்டிற்றான் போர்த்துக்கேயர் யாழ்ப்பாணத்தில் ஆட்சி செய்யமுடிந்தது.

ஆட்சியை அடைவதற்காகத் தனது தந்தை 7 ஆம் விசயபாகுவைக் கொன்று தம்பியுடன் ஆட்சியைப் பங்கிட்டுக்கொண்ட 7 ஆம் புவனேகபாகு, தனக்குப்பின் ஆட்சி தன் தம்பிக்குச் சென்றுவிடக்கூடாது என்பதற்காகப் போர்த்துக்கேயரின் உதவியை நாடினான்; போர்த்துக்கேயரை மகிழ்வித்து உதவியைப் பெறுவதற்காகத் தனது பிள்ளைகளைக் கத்தோலிக்க நெறிக்கு மாற்றுவித்தான்; கத்தோலிக்க நெறிக்குரவரை (மதகுருமாரை) அழைத்துத் தனது நாட்டிற் கத்தோலிக்க நெறிப் பரப்புரை (மதப்பிரச்சார) செய்ய இடமளித்தான்

இவன் தம்பி மாயாதுன்னையோ தான் ஆட்சியைப் பெறுவதற்காகத் தந்தை விசயபாகுவைக் கொன்றது மட்டுமன்றி அண்ணன் புவனேகபாகுவையும் ஆள்வைத்துக் கொன்றான். பேரன உறவுடையவனான தர்மபாலவுக்கு நஞ்சூட்டுவித்தான், ஆட்சியைப் பெறுவதற்காகப் போர்த்துக்கேயரிடம் பேரம்பேசித் தூதனுப்பினான். அண்ணனுக்கெதிராக, மருமகனுக்கெதிராகப் போர் தொடுத்தான். தர்மபாலவோ இன்னொருபடி மேலே போய் 7 ஆம் புவனேகபாகுவின் குறுக்குவழி முயற்சியினாற் பெற்ற ஆட்சியை நிலை நிறுத்துவதற்காகக் கத்தோலிக்க நெறிக்கு மாறினான், தனக்குப் பிள்ளைகள் இல்லாததனால் தனக்குப்பின் தன் ஆட்சி மாயாதுன்னைவழி உறவினர்களுக்குச் சென்றுவிடக்கூடாது என்பதற்காக முன்கூட்டியே தனக்குப்பின் ஆட்சி போர்த்துக்கேயருக்குச் சென்றடைய வேண்டும் என அடிமைமுறி எழுதிக்கொடுத்தான்;

மூதாதையர்களது நாட்டின் இறைமையையும், நாட்டு மக்களையும் காக்கவேண்டிய அன்றைய சிங்கள மன்னர்கள் போர்த்துக்கேயரது ஊடுருவல்களை எதிர்க்கவில்லை; எதிர்க்காதது மட்டுமன்றி, விழைந்து வரவேற்றார்கள். அதுமட்டுமல்ல, தமது ஆட்சியைத் தாமாகவே போர்த்துக்கேயருக்கு வழங்கி மகிழ்ந்தனர். அதுமட்டுமல்ல, போர்த்துக்கேயரின் ஊடுருவல்களை எதிர்த்த தமிழ் மன்னர்களையும் மண்ணையும் வெற்றி கொள்ளப் போர்த்துக்கேயருக்குப் பல வழிகளிலும் துணைபோயினர்.

பயிற்சி:

01. போர்த்துக்கேயர் இலங்கைத்தீவிலே முதன்முதலிற் காலடி எடுத்து வைத்தது எந்த ஆண்டில்? அப்போது இலங்கைத்தீவில் எத்தனை அரசுகள் இருந்தன? அவற்றில் எந்த அரசு வலுவுள்ள அரசாக இருந்தது?

02. இலங்கைத்தீவில் முதலிலே காலடிவைத்த போர்த்துக்கேய ஆளுநர் யார்?

03. போர்த்துக்கேயர் கோட்டைச் சிங்கள அரசனுடன் முதலிற் செய்துகொண்ட உடன்படிக்கை என்ன?

04. 7 ஆம் விசயபாகுவைக் கொன்று ஆட்சியைப் பகிர்ந்து கொண்ட புதல்வர்களின் பெயர்களைத் தருக:- அவர்கள் எடுத்துக்கொண்ட ஆட்சிப் பகுதிகள் எவை?

05. விதியபண்டாரவின் மகன் பெயர் என்ன? மாமனின் பெயர் என்ன?

06 1 ஆம் இராசசிங்கன் எந்த ஆண்டில் ஆட்சிப் பொறுப்பேற்றான்? அவன் எந்த இறைநெறியைச் சார்ந்தவனாக இருந்தான்?

07. கண்டி மன்னனாற் போர்த்துக்கேயருக்கு அனுப்பப்பட்ட செல்வங்களைக் கப்பலோடு 1 ஆம் சங்கிலியன் கைப்பற்றிய ஆண்டு எது?

08. விதியபண்டாரனிடமிருந்த போற்றத்தக்க குணம் என்ன?

09. இப்பாடத்திலிருந்து தன்னலத்துக்காக நாட்டு நலனையும் இன நலனையும் புறக்கணித்து இரண்டகஞ்செய்த 3 சிங்கள மன்னர்களின் பெயர்களைக் குறிப்பிடுக? அவர்களின் ஒவ்வொருவரினதும் இரண்டகச் செயல்களைக் குறிப்பிடுக:-

10. தன் இனத்துக்காகவும் நாட்டுக்காகவும் மட்டுமின்றி அயல் நாட்டின் நலனுக்காகவும் 1 ஆம் சங்கிலியன் ஆற்றிய பணிகள் எவை?

11. தன்மீது படையெடுத்து வந்த போர்த்துக்கேயர் பெரும் படையைக் களைக்க வைக்க 1 ஆம் சங்கிலியன் மேற்கொண்ட போர் உத்தி என்ன?

12. இலங்கைத்தீவில் போர்த்துக்கேயர் ஆட்சி அமைக்கக்கூடிய சூழ்நிலை எவ்வாறு ஏற்பட்டது?

13 போர்த்துக்கேயர் யாழ்ப்பாண மண்ணில் எந்த ஆண்டில் ஆட்சியமைத்தனர்?

## இயல் - 04

# வீரஞ்செறிந்த வன்னியும் தமிழரசுகளும்

### வன்னியின் தொன்மை

வன்னிப் பெருநிலப்பரப்பானது, இலங்கையின் தொல் குடியினரான பெருங்கற்பண்பாட்டுக்குரிய பழந்தமிழ் மக்கள் வாழ்ந்த பகுதிகளில் முதன்மையான பகுதியாகும். இப்பகுதி வடக்கே யாழ்ப்பாணக் கடல்நீரேரியையும், தெற்கே அருவியாற்றையும், அனுராதபுரத்தையும், கிழக்கே திருகோணமலையையும், மேற்கே மன்னாரையும் எல்லைகளாகக் கொண்டிருந்ததாக 1890 இல், ஆங்கிலேய அரசின் வன்னி மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்த ஜே. பி. லூயிஸ் தான் எழுதிய வன்னிக்கைநூலிலே (Manuarl of Vanni) குறிப்பிட்டுள்ளார்.

ஆயினும் வன்னியின் தெற்கெல்லை, காலத்துக்குக் காலம் தென்கிழக்கே கொட்டியாரம் வரையும் தென் மேற்கே புத்தளம் வரையும் பரந்து விரிந்தமைக்கான பல வரலாற்றுக் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

வரலாற்றுக்கு முந்திய காலத்திலிருந்தே திராவிட இனத்தின் பழந்தமிழ் மக்கள் இப்பகுதிகளில் வாழ்ந்துவந்தமைக்கும் ஆட்சி செய்துவந்தமைக்கும் பல்வேறு வரலாற்றுச் சான்றுகள் கிடைத்துள்ளன.

- ★ பெரிய புளியங்குளத்திற் காணப்பட்ட பிராமிக் கல்வெட்டுக்கள்.
- ★ பொம்பரிப்பு, மாதோட்டம், குஞ்சுப்பரந்தன் ஆகிய பகுதிகளிற் கண்டெடுக்கப்பட்ட ஈமத்தாழிகள், எலும்புக்கூடுகள்.
- ★ எல்லாளமன்னனால் வெட்டப்பட்டதாகக் கூறப்படும் குளங்கள்.
- ★ பூநகரிப் பகுதியிற் கண்டெடுக்கப்பட்ட பல்வேறு நாடுகளினதும் பண்டைக்காலக் காசுகள் மட்கலங்கள், செப்பேடுகள், பிராமி எழுத்துக்களுடன் கூடிய மட்கலத் துண்டுகள் மற்றும் பெருங்கற் காலத்திற் பயன்படுத்தப்பட்ட பொருட்கள் என்பன அவற்றிற்சிலவாகும்.

வன்னியின் பெரியபுளியங்குளத்திற் கண்டுபிடிக்கப்பட்ட 35 பிராமிக் கல்வெட்டுக்களிற் சில தமிழ்ப் பிராமி எழுத்துக்களைக் கொண்டவையாகும். அக்கல்வெட்டுக்களிற் சிலவற்றை வாசித்தறிந்ததிலிருந்து இப்பகுதிகளில் நிலவிய தமிழ்ச் சிற்றரசுகளின் ஆட்சிச் சிறப்பு, வணிகச்சிறப்பு, மொழிச்சிறப்பு, என்பவற்றை அறிந்து கொள்ளமுடிகிறது. தமிழ்ச்சிற்றரசர் குலங்களைக்குறிப்பிடும் ''ஆய்,'' ''வேள்,'' ''பருமக,'' போன்ற சொற்கள் அக்கல்வெட்டுக்களில் வாசித்தறியப்பட்டன.

கல்வெட்டுக்கள் தவிர இப்பகுதியில் இருக்கும் நாகதேவன்துறை போன்ற இடப்பெயர்கள், நாகபடுவான்குளம் போன்ற குளப்பெயர்கள் மற்றும் இப்பகுதியில் வழக்கத்தில் உள்ள ''நாக'' எனத் தொடங்கும் கோயில்கள், கடவுளர், ஆட்களின் பெயர்கள் என்பவையும் பழந்தமிழர்களான நாகர்களுக்கும் வன்னி மண்ணுக்கும் உள்ள தொடர்புகளுக்குச்சான்றாக விளங்குகின்றன. ''நாகதீப'' (ம்) என மகாவம்சத்திற் குறிப்பிடப்படும்பகுதி வன்னியையும் உள்ளடக்கியபகுதியென்பதும் குறிப்பிடத்தக்கது.

வன்னியில் வழங்கப்படும் மிகப்பெருவாரியான ஊர்ப்பெயர்கள், நீர்நிலைகளைக் குறிக்கும் தமிழ்ச் சொற்களான குளம், கேணி, வாய்க்கால், கட்டு, ஓடை, மடு, முறிப்பு, மோட்டை, வில், ஆறு, தண்ணி போன்றவற்றையே கொண்டிருக்கின்றன. வன்னி மண் தமிழ்மக்கள் பரந்தும் செறிந்தும் வாழ்ந்த தொன்மையான மண் என்பதை இவை எடுத்துக்காட்டுகின்றன. என்று ஜே. பி. லூயிஸ் சுட்டிக்காட்டியுள்ளார். இதைவிட வன்னி தமிழர்களின் பகுதி என்பதை எடுத்துக்காட்ட வேறு சான்றுகள் தேவையில்லை.

வன்னியிற் கண்டெடுக்கப்பட்ட எலும்புக்கூடுகள் திராவிட இனத்தவர்க்குரியவை என்பது மானிடவியலாளர்கள் பலரின் முடிவாகும். இப்பகுதிகளிற் கண்டெடுக்கப்பட்ட ஈமத்தாழிகள் தென்னிந்தியாவிற் கண்டெடுக்கப்பட்ட பெருங்கற்கால ஈமத்தாழிகளை ஒத்தவையாகும் எனத் தொல்லியலாய்வாளர்கள் பலர் குறிப்பிட்டுள்ளனர்.

89 ஆம் 90 ஆம் ஆண்டுகளில், பூநகரிப் பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட மேலாய்வுகளும், அகழ்வாய்வுகளும் பூநகரிப்பகுதி தமிழர்களின் ஆட்சிமையமாக தலைநகராக இருந்தமையை உறுதிப்படுத்தும் பல உண்மைகளை எமக்குத் தந்துள்ளன;

அவ்வாய்வுகளின் போது பல நாடுகளுக்குரிய பண்டைய காசுகள், மட்கலங்கள், பிராமி எழுத்துக்களுடன் கூடிய மட்கலத்துண்டுகள், கட்டட அழிவுகள் போன்ற தொல்லியற் சான்றுகள் கிடைத்துள்ளன;

கிரேக்க, உரோம, சீன, அரேபியக் காசுகளுடன் சோழ, பாண்டிய, யாழ்ப்பாண அரசுகளின் காசுகளும் ஏராளமாகக் கண்டெடுக்கப்பட்டன; இவற்றுள் கி. மு. 5 ஆம் நூற்றாண்டுக்குரிய காசுகளும் அடங்கும்; இங்கு கண்டெடுக்கப்பட்ட காசுகளும் மட்கலங்களும், யாழ்ப்பாண அரசின் தொன்மையான தலைநகராகக்கருதப்படும் கதிரமலை (கந்தரோடை) ப் பகுதியின் அகழ்வாய்வின்போது கண்டெடுக்கப்பட்ட பொருட்களையொத்தவையாகும்.

எனவே கந்தரோடைக்கு நிகரான தலைநகராக, வணிகநகராகப் பூநகரி விளங்கியது என்பது புலனாகின்றது. வன்னியின் தொன்மையையும் சிறப்பையும் அறிந்துகொள்ள இவை போதுமான சான்றுகளாகும். இப்பகுதிகளிற் காணப்படும் கட்டட இடிபாடுகளைச் செம்மையாக ஆராயுமிடத்து, வடஇலங்கைத் தமிழரசுகளின் தலைநகராக வன்னி விளங்கியதுபற்றியும் அதன் ஆட்சிக்காலம் பற்றியும் தெள்ளெனத் தெரிந்து கொள்ளமுடியும்.

இவைதவிர, இடைக்கால பிற்காலத் தமிழரசுகளின் ஆட்சிமையங்கள் தலைநகர்கள் இருந்தமைக்கான பல தடயங்கள் முத்தையன்கட்டு, பனங்காமம் உட்பட வன்னியின் பல்வேறு பகுதிகளிலும் பரவலாகக் காணப்படுகின்றன. இவை முழுமையாக ஆராய்ந்து அறியப்பட வேண்டியவையாகும்.

## வன்னித் தமிழரசர்கள்

13 ஆம் நூற்றாண்டிலிருந்து யாழ்ப்பாண அரசு வலிமை மிகுந்திருந்த காலங்களில், அதன் ஆளுமையை ஏற்று வன்னிச்சிற்றரசுகள் தனியாக இயங்கி வந்தன. யாழ்ப்பாண அரசு வலிமைகுன்றிய காலங்களில், வன்னியரசுகள் தனித்தன்மையுடைய அரசுகளாக இயங்கின;

யாழ்ப்பாண அரசு போர்த்துக்கேயரிடம் வீழ்ச்சியடைந்தமையையடுத்து 17 ஆம் நூற்றாண்டில் நடுப்பகுதியில் வன்னியின் பனங்காமத்தில், வலிமை மிகுந்த அரசாக கயிலைவன்னியன் அரசு விளங்கியது.

யாழ்ப்பாணத் தமிழரசின் வீழ்ச்சியின் பின் வன்னியில் நிலவிய கயிலைவன்னியனது ஆட்சியும் பண்டாரவன்னியனது ஆட்சியுமே தமிழருக்குப் பெருமைதரக்கூடிய ஆட்சிகளாகவும் மாற்றாரை வியக்கவும் திகைக்கவும் வைத்த ஆட்சிகளாகவும் அமைந்தன. சிதம்பரநாச்சி, நல்லநாச்சி போன்ற வன்னியின் அரசகுலப்பெண்களும் ஒல்லாந்தருக்

கெதிராகப்படைதிரட்டிப் போரிட்டமை பற்றி, செவிவழிச் செய்திகளினூடாகவும் பிற்காலத் தமிழ் இலக்கியங்களினூடாகவும் அறிந்து கொள்ளமுடிகிறது. தமக்கெதிராக மேற்கொள்ளப்பட்ட போர்களின் போதெல்லாம் வன்னியரசர்களும் வன்னிமக்களும் தமது தளராத, உறுதியான, கடுமையான எதிர்ப்பினை வெளிப்படுத்தி வந்துள்ளனர். வீரஞ்செறிந்த இவர்களின் போர்வலிமையினாலும் உணர்வினாலும் வன்னிமண் அடங்காப்பற்று என்ற சிறப்புப்பெயரையும் தாங்கி நிற்கின்றது.

## கயிலைவன்னியன் (1644 - 1678)



வன்னிமண்ணை ஆட்சி செய்தவர்களிற் கயிலைவன்னியனின் ஆட்சிக்காலத்தை, வன்னித்தமிழர்களின் பொற்காலமாகக் கொள்ளலாம். கயிலைவன்னியன் கயிலாய வன்னியன் என்றும் அழைக்கப்பட்டான். போர்த்துக்கேயரின் ஆட்சியின்போதும் ஒல்லாந்தரின் ஆட்சியின் போதும் அவர்களுக்குத் தலை வணங்காமல் அவர்களுக்குத் திறை செலுத்தாமல் வன்னியின் பனங்காமம் பற்றிலிருந்து 1644 ஆம் ஆண்டு முதல் தனது வலிமையான ஆட்சியை நடத்திவந்தான்.

இவன் ஆட்சி தொடங்கியதிலிருந்து யாழ்ப்பாணத்தில் போர்த்துக்கேயரது ஆட்சியின் இறுதிக்காலம் வரை 14 ஆண்டுகளில் அவர்களது கட்டளைகளுக்கடங்காது அவர்களுக்குத் திறை செலுத்தமறுத்து வந்தான். அது போன்றே, ஒல்லாந்தரது ஆட்சிக்காலத்திலும் இறுதி வரை அவர்களுக்கு அடங்கவோ திறை செலுத்தவோ அன்றி அவர்களின் கட்டளையை ஏற்று யாழ்ப்பாணம் செல்லவோ மறுத்து வந்தவன் என்று ஒல்லாந்து ஆளுநர் தோமஸ் வான்றி தனது அறிக்கையிற் குறிப்பிட்டுள்ளார்.

வன்னியின் ஆற்றல் மிக்க தலைவனாகத் திகழ்ந்த கயிலைவன்னியனுடன் கண்டி மன்னன் இரண்டாம் இராசசிங்கன் நட்புப்பூண்டிருந்தான். வன்னிப்பகுதி ஏழுபற்றுக்களாகப் பலரின் ஆட்சிப்பொறுப்பிலிருந்தபோதிலும், வன்னிக்கு மாற்றாரினால் அச்சுறுத்தல் என்ற நிலை ஏற்பட்டால் அனைவரும் கயிலைவன்னியன் தலைமையில் ஒன்று சேர்ந்து எதிர்ப்பைக்காட்டும் நிலை வன்னியில் அன்று இருந்துவந்தது. வன்னியின் ஏனைய சிற்றரசுகளுக்கிடையே கயிலைவன்னியனது பனங்காமம்பற்று அரசு பேரரசாக மதிக்கப்பட்டது. றோபேட் நொக்ஸ் அவர்கள் தமது இலங்கையின் வரைபடத்தில் கயிலைவன்னியனின் ஆட்சிப் பகுதி தென்கிழக்கே கொட்டியாரத்தையும் உள்ளடக்கியதாகப் பரந்திருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்; அவர் கண்டிச்சிறையிலிருந்து தப்பிச்செல்கையில் ஆற்றல

மிக்க கயிலைவன்னியனுக்கு அஞ்சி வடபகுதிக்குச் செல்லாது அனுராதபுரத்திலிருந்து மேற்காக அரிப்புக்குச் சென்று அங்கிருந்து தன் தாய்நாட்டிற்குச் சென்றார்.

கயிலைவன்னியன் தம் ஆட்சிப்பகுதியான யாழ்ப்பாணத்தின்மீது படையெடுக்கக்கூடுமென்று அஞ்சியே போத்துக்கேயர் வெற்றிலைக்கேணியில் பெங்சூற்றர் (Beschuter) என்னும் கோட்டையையும் ஆனையிறவில் பைல் (Pyl) என்னும் கோட்டையையும் அமைத்ததாகக் கூறப்படுகிறது. கயிலைவன்னியனின் 34 ஆண்டுகால வீரஞ்செறிந்த ஆட்சி கி. பி. 1678 இல் அவனது இயற்கைச் சாவையடுத்தே முடிவுக்கு வந்தது. வன்னிமண் உள்ளவரை அவனது வீரஞ்செறிந்த வரலாறு நிலைத்து நிற்கும்.

## பண்டாரவன்னியன் (1785 - 1811)

கயிலைவன்னியனது ஆட்சிக்குப்பின் ஒரு நூற்றாண்டுக்கு மேலாக வன்னியில் 20 இற்கும் மேற்பட்டவர்கள் ஆட்சிபுரிந்திருந்தாலும் வன்னியிற் புகழ்பூத்த ஆட்சியாகத் திகழ்ந்தது குலசேகரம் வயிரமுத்து பண்டாரவன்னியனது ஆட்சியேயாகும்.

தமிழகத்தின் பாஞ்சாலங்குறிச்சியில் வீரபாண்டிய கட்டப்பொம்மனும் சிவகங்கையில் மருது பாண்டியரும் தமிழகத்தை அடக்கவந்த ஆங்கிலேயருக்கெதிராகப் போர்புரிந்து



வீரச்சாவைத் தழுவிக் கொண்டதற்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னரும் வன்னியில் ஒல்லாந்தரையும் ஆங்கிலேயரையும் எதிர்த்து வீரப்போர் புரிந்தவன் பண்டாரவன்னியன்.

பண்டாரவன்னியனின் ஆட்சித்தொடக்க ஆண்டு எது என்று அறிய முடியாவிட்டாலும் 1785 ஆம் ஆண்டோடு தொடர்புடைய அவனது ஆட்சி பற்றிய செய்தி சில நூல்களிலிருந்து எமக்குக் கிடைக்கின்றன. இலங்கையின் வரலாற்றில் ஆங்கிலேயர்களை எதிர்த்துப்போராடிய இறுதி இலங்கை மன்னன் குலசேகரம் வயிரமுத்து பண்டாரவன்னியன் என்ற உண்மை, தமிழர்தம் வரலாற்றுக்குப் பெருமைசேர்க்கின்றது. போர்த்துக்கேயரினால் அமைக்கப்பட்ட 'பெஸ்சூற்றர்' கோட்டையினையும் 'பைல்' கோட்டையினையும் ஒல்லாந்தரும் ஆங்கிலேயரும் தக்கவைத்துக்கொண்டனர். ஆனால் 1803 இல் ஆங்கிலேயர் கண்டிமீது படையெடுத்தபோது வாய்ப்பைப்பயன்படுத்திய பண்டாரவன்னியன் ஆங்கிலேயரின் கோட்டைகள் மீது தாக்குதலில் இறங்கினான் 'பெஸ்சூற்றர்' கோட்டையினைக் கைப்பற்றப் பண்டாரவன்னியன் தலைமையில் சுண்டிக்குளமூடாக ஒரு படையணி புறப்பட்டது. 'பைல்' கோட்டையைக் கைப்பற்ற குலசேகரமுதலியார் தலைமையிலான படையணியொன்று கண்டாவளையூடாகப்புறப்பட்டது. இதே நேரம் ஆங்கிலேயருடன் போரிலீடுபட்டிருந்த கண்டிமன்னன் விக்கிரமராசசிங்கனுக்குதவியாகவும் தனது படையணி ஒன்றைப் பண்டாரவன்னியன் அனுப்பிவைத்ததாகக் கூறப்படுகிறது: 'பெஸ்சூற்றர்' கோட்டையும், 'பைல்' கோட்டையும் கைப்பற்றப்பட்டன. பண்டாரவன்னியனது இத்தகைய ஆற்றலும் உறுதியும் ஆங்கிலேயப் படைகளையும் படைத்தளபதிகளையும் வியப்புக்கும் குழப்பத்துக்குமுள்ளாக்கியது. இக்குழப்பத்திலிருந்து மீளுமுன்னரே 1803 ஒக்ரோபர் 25 ஆம் நாள் முல்லைத்தீவிற் கட்டப்பட்டுக்கொண்டிருந்த ஆங்கிலேயரின் கோட்டையினையும் பண்டாரவன்னியனின் படையணிகள் தாக்கி, அங்கிருந்த மூன்று பீரங்கிகளையும் கைப்பற்றின. கப். வொன் றிபேக்கும் ஆங்கிலேயப்படையினரும் படகுகளில் ஏறி யாழ்ப்பாணத்துக்குத்தப்பிச் சென்றனர். ஏற்கனவே ஒருதடவை நடந்த சண்டையிலும் கப். வொன் றிபேக் பண்டாரவன்னியனிடம் தோல்வியைத் தழுவியிருந்ததால் பெரும் மானக்கேட்டுக்குள்ளாகினான்.

பண்டாரவன்னியனை எப்படியேனும் அழித்துவிடவேண்டுமென ஆங்கிலேப்படை முடிவெடுத்தது. இதனால் மன்னாரிலிருந்தும், யாழ்ப்பாணத்திலிருந்தும், திருகோணமலையிலிருந்தும் மூன்று பெரும் படைப்பிரிவுகள் மும்முனைகளில் இருந்தும் வன்னிக்கு முன்னேறின. மன்னாரிலிருந்து முன்னேறிய படைக்கு கப். வொன் றிபேக்கும் யாழ்ப்பாணத்திலிருந்து முன்னேறியபடைக்கு ஜோன் யுவலும் திருகோணமலையிலிருந்து முன்னேறிய படைக்கு எட்வேட் மெச்சினும் தலைமை தாங்கினர். கப். வொன் றிபேக் ஏற்கனவே ஒல்லாந்தப்படையிலிருந்து பின் ஆங்கிலேயப்படையுடன் சேர்ந்திருந்தான்.

எட்வேட் மெச்சின் தலைமையிலான ஆங்கிலேயப்படைகளின்மீது குலசேகரமுதலியார் தலைமையிலான படையணி முல்லைத்தீவில்வைத்துத் தாக்குதல் தொடுத்தது. ஆனால், கடுஞ்சமரின்பின் ஆங்கிலேயப்படைகளிடம் இவர்கள் தோற்றனர். குலசேகரமுதலியாரும் இப்போரிலே கொல்லப்பட்டார்,

குலசேகரமுதலியாரின் இழப்பு பண்டாரவன்னியனுக்குப் பேரிழப்பாகியது. இத்தகைய சூழலில், 1803 ஒக்ரோபர் திங்கள் 31 ஆம் நாள் விடியற்காலையில் எதிர்பாராத வகையில், பண்டாரவன்னியனும் அவனது படைகளும் ஆங்கிலேயப்படைகளை எதிர்கொள்ளவேண்டியேற்பட்டது; போரிலே பண்டாரவன்னியன் தன்வீரர்கள் அனைவரையும் இழக்கும்நிலை ஏற்பட்டது; ஆங்கிலேயர் கையில் தான் அகப்பட்டுவிடக்கூடாதென எண்ணி அங்கிருந்து தப்பிச்சென்றான். ஏழு ஆண்டுகள்வரை பனங்காமத்தில் மறைந்திருந்து படைதிரட்டினான். அவன் ஆங்கிலேயருக்கு எதிராகப்படைதிரட்டுவதாக மேல்பற்றுமூலை முதலியார் கதிர்காமநாயகம் என்பவனால் ஆங்கிலேய ஆளுநருக்குத்தகவல் கொடுக்கப்பட்டதால், பண்டாரவன்னியன் ஆங்கிலேயரின் பெரும்படையைத் திடீரென எதிர்கொள்ளவேண்டியேற்பட்டது. மீண்டும் ஆங்கிலேயரின் படைகளோடுப் போரிட்டான். 1811 இல், உடையாவூரில் நடந்த இப்போரில் விழுப்புண்பட்டு பனங்காமத்தில் மருத்துவம் மேற்கொள்கையில் அது பயனளிக்காத நிலையில், அங்கு உயிர்நீத்தான். பண்டார

வன்னியனின் வீரத்தையும், வலிமையையும் விளக்கும் வரலாற்றுக் குறிப்புக்கள் பல எமக்கு இன்னும் கிடைக்காவிட்டாலும் அவன் தொடர்புடைய முல்லைத்தீவு, முள்ளியவளை, பண்டாரிக்குளம், காதலியார்சமளங்குளம், 18 ஆம் போர், பனங்காமம், உடையாவூர் போன்ற ஊர்கள் அவன் நினைவை எம்நெஞ்சில் நிலைநிறுத்திக்கொண்டேயிருக்கும்.

பண்டாரவன்னியனைக்கொல்ல முடியாவிட்டாலும் அவனைத்தோற்கடித்துத்தன் மானக்கேட்டை நீக்க முற்பட்ட கப். வொன் றிபேக், கற்சிலைமடுவில் கல்வெட்டொன்றை நாட்டினான். பண்டாரவன்னியனின் தோல்வியின் அடையாளமாக அக்கல் வொன் றிபேக்கினால் நிறுவப்பட்டிருந்தாலும் ஒல்லாந்தரையும், ஆங்கிலேயரையும் திகைப்புக்கும் வியப்புக்குமுள்ளாக்கிய மான மறவன் பண்டாரவன்னியனின் வரலாற்று அடையாளமாகவும் அது திகழ்கிறது. எவ்வாறாயினும் இறுதிவரை ஐரோப்பியருக்கு அடிபணிய மறுத்து அவர்களை எதிர்த்துநின்ற இலங்கையின் இறுதிமன்னன்; தமிழ் மன்னன்; வன்னிமன்னன் அவன். அவன் பெற்ற வரலாற்றுப் புகழினையும், அவனது வீரத்தையும் யாரும் மறைக்கவோ மறுக்கவோ முடியாது.

பயிற்சி:

01) வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வன்னியிலே, தமிழ்மக்கள் வாழ்ந்து வந்தமையை உறுதிப்படுத்தும் சான்றுகள் எவை?

02) வன்னியிலே தமிழ்ப்பிரமிக்கல்வெட்டுக்கள் எவ்விடத்திலே கண்டுபிடிக்கப்பட்டன?

03) வன்னியில் வழங்கப்பட்டுவரும் ஊர்ப்பெயர்களில் உள்ள நீர்நிலைகள் குறித்து 10 சொற்களைத் தருக?

04) பூநகரிப் பகுதி தமிழரின் ஆட்சிமையமாக, தலைநகராக இருந்தமைக்கான சான்றுகள் எவை?

05) 17 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வன்னியில் வலிமைபெற்றிருந்த தமிழரசு எங்கிருந்தது? அதன் அரசன் யார்?

06) வெற்றிலைக்கேணி, ஆனையிறவுப் பகுதிகளிற் கட்டப்பட்ட கோட்டைகளின் பெயர்கள் எவை? அவை யாரால் கட்டப்பட்டன?

07) 18 ஆம் நூற்றாண்டில் வன்னியிற் புகழ்பூத்த தமிழராட்சி எந்த ஆண்டுகளில் நிலவியது?

08 தமிழகத்தில் ஆங்கிலேயருக்கு எதிராகப் போராடிய வீரபாண்டியகட்டபொம்மன் மருதுபாண்டியர் காலத்துக்குப் பின்னரும் வன்னியில் ஒல்லாந்தரையும் ஆங்கிலேயரையும் எதிர்த்து வீரப்போர் புரிந்த தமிழ் மன்னன் யார்?

09) முல்லைத்தீவிலிருந்த ஆங்கிலேயரின் கோட்டை கைப்பற்றித் தகர்க்கப்பட்டு, பீரங்கிகள் மூன்று கைப்பற்றப்பட்டது எந்த ஆண்டில்?

10) கற்சிலைமடுவிலுள்ள பண்டாரவன்னியன் பற்றிய நினைவுக்கல் எதனைக் குறிப்பிடுகிறது?

11) பண்டாரவன்னியன் பெற்ற வரலாற்றுப்புகழ் என்ன?

12) வன்னித்தமிழர்களின் பொற்காலம் எனக் கூறப்படும் காலம் எது?

13) 1803 ஒக்ரோபரில் பண்டாரவன்னியனைத் தோற்கடிக்க மூன்று முனைகளிருந்து புறப்பட்ட படைகள் யார் யார் தலைமையில் எங்கிருந்து புறப்பட்டன?

14) 1890 களில் வன்னி பற்றிய செய்திகளைக் கொண்ட வன்னிக்கைந்நூலை எழுதியவர் யார்? அவர் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?

# அட்டைப் படத்துக்கு எழிலூட்டுபவை

★ சங்கிலிய மன்னனும் நந்திக்கொடியும்

★ யாழ்ப்பாணத் தமிழரசின் காசு [சேது நாணயம்]

★ திருக்கோணேசர் மலையும் கோயிலும்

★ ஈமத்தாழி பொம்பரிப்பு [புத்தளம்]

★ கல்வட்டம் மாமடுவ [வவுனியா]

★ கல்மேசை கதிரவெளி [மட்டக்களப்பு]

சிங்கள அரசின் பொருண்மியத் தடையினால் காகிதாதிகள், அச்சுப் பொருள்களுக்கு நிலவுகின்ற பெருந் தட்டுப்பாடுகளுக்கிடையில் வெளியிடப் பட்டிருக்கும் இந்நூலை நீண்டகாலம் பேணிக்காத்துப் பயன்படுத்துமாறு மாணவச் செல்வங்களை வேண்டுகின்றோம்.

கன்னிநிலம் பதிப்பகம் 101, முருகன் கோவில் முன்வீதி ஸ்கந்தபுரம்.